# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, புரட்டாசி Oct, 78 [பரல்-௨

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ००கூ, புரட்டாசி அக்டோபர் 1978 | பரல் உ |
| --- | --- | --- |

## பெரியார் நூற்றுண்டு விழா

இவ்வாண்டில் நூருண்டு நிறைவுற்றுத் தமிழ்நாட்டில் மட்டு மன்றி இந்தியத் துணைக் கண்டத்தின் பலவிடங்களிலும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் முதலிய அயல் நாடுகளிலும் சிறப்புற நூற்றுண்டு விழாக் கொண்டாடப்பெறும் பெருந்தலைவரான **பகுத்தறிவுத் தந்தை ஈ. வே. இராமசாமிப் பெரியார்** அவர்கள் தமது 95ஆம் அகவையில் கடந்த 1973 ஆம் ஆண்டு இம் மண்ணுலகி னின்றும் மறைவுற்றுர் எனினும், மக்கள் தம் மனவுலகில் மங்காத புகழ் வடிவினராய் என்றும் பேரொளி வீசித் திகழ்ந்து கொண்டிருக்கின்றுர்.



பெருஞ்செல்வக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த பெரியார் 1907 ஆம் ஆண்டிலேயே பேராயக்கட்சி (Congress party) யில் ஈடுபாடு கொண்டார்; கள்ளுக்கடை மறியல், கைநூலாடை (கதர்) விற்பனை முதலிய வற்றில் பங்கு கொண்டார்; தமிழ்நாட்டுப் பேராயக்கட்சியின் தலைவராகவும், பின்னர்ச் செயலாளராகவும் பொறுப்பேற்று நற்பணி

யாற்றினர்; ஈரோடை *நகரவைத் தலைவராகப் பதவியேற்றுச் சீருற நடாத்தினர். மற்றும் இருபத்தெட்டுக் கண்ணியப் பதவிகள் தாங்கினர். பின் அவையெல்லாம் பெரியாரால் துறக்கப்பட்டன.

காந்தியடிகளின் பாராட்டுக்குரியராய், இராசாசி முதலியவர்கட்கு நண்பராய், விரல்விட்டு எண்ணத்தக்க இந்தியப் பெரும் புள்ளிகளுள் ஒருவராய் விளங்கிய பெரியார் முன்னரே தமிழினம் அயலினத்துக்கு அகத்தும் புறத்தும் அடிமைப்பட்டு அதனால் பல வகையிலும் இழிவுக்கும் இன்னலுக்கும் ஆளாகித் தன்னிலை மறந்து, தலை தடுமாறி ஆரியமாயையிற் சிக்கிக்கிடக்கும் அவல நிலையையும், இந் நிலை மாற்றப்பட்டாலொழிய வெள்ளையரிட மிருந்து விடுதலை பெறுவதனால் நம்மவர்கட்கு எவ்வகை நன்மையும் விளையாது என்பது மட்டுமன்றி, அது தீமையாகவும் முடியும் என்பதனையும் தெளிவாகவும் திட்பமாகவும் உணர்ந்தார். அதன் பின்னர் அவர்தம் நோக்கு போக்குகளும், முயற்சிகளும் திசை திரும்பின.

பிறவிக்குல வேற்றுமை, தீண்டாமைக் கொடுமை, பெண்ணடிமை முதலியவற்றை வேரோடும், வேரடி மண்ணோடும் ஒழிக்க முனைந்தெழுந்தார். எண்ணற்ற கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப் போகவெனச் சாடினர். மனத்திற் பட்டவற்றை மறைக்காமலும் மழுப்பாமலும் அஞ்சாமையோடு அழுத்தந் திருத்தமாகப் பேசினர், எழுதினர், போராடினர், வாழ்ந்து காட்டினர். இரவென்றும் பகலென்றும் பாராமல், வெயில் குளிரென்றும், மழை பனியென்றும் ஒதுங்காமல், பசியென்றும் நோயென்றும் சோராமல், மாற்றாரின் இழிமொழிகளையும் பழிவினைகளையும் பொருட்படுத்தாமல், எவருடைய ஏற்றுதலுக்கும் போற்றுதலுக்கும் மயங்காமல், எதன்பொருட்டும் தயங்காமல் தொடர்ந்து போராடினர்.

*"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்*
*எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி*
*அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்*
*கருமமே கண்ணாயி னார்"*

என்னும் நீதிநெறி விளக்கத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கினர்

1932ஆம் ஆண்டிற்கு முன்னரே எகிபது, உருசியா, கிரீசு, துருக்கி, செருமனி, பெயின், பிரான்சு, போர்த்துகல், இங்கிலாந்து, இலங்கை, பர்மா, மலேசியா முதலிய நாடுகளில் சுற்றுப்போக்கு

* *ஈரோடை என்னும் பெயரே இக்காலத்து ஈரோடு என மருவியுள்ளது.*

மேற்கொண்டு பரந்துபட்ட உலகியலறிவு வாய்ந்த பெரியார் அவர்கள் தம் கருத்துப் புரட்சிக்குரிய படைக்கலங்களாகக் குடியரசு, பகுத்தறிவு, புரட்சி, உண்மை, விடுதலை என்னும் தமிழ்த் தாளிகை (பத்திரிகை)களையும் Revolt, Modern Rationalist என்னும் ஆங்கிலத் தாளிகைகளையும் நடத்தினர்.

1924ஆம் ஆண்டில் தமிழ்நாட்டுப் பேராயக்கட்சித் தலைவரா யிருந்து பெரியார் அவர்கள் கேரளத்தில் வைக்கம் மகாதேவர் கோயில்முன் அறப்போர் நடத்தித் தீண்டாமையை ஒழித்து வெற்றி கண்டார். அதனல் தமிழ் முனிவர் திரு. வி க அவர்கள், அவரை **வைக்கம் வீரர்** என்று போற்றிப் பாராட்டினர்.

1926ஆம் ஆண்டிலேயே இந்திக் கொள்கையை எதிர்த்துக் குரலெழுப்பினர் பெரியார். அது முதல் தமிழ் நாட்டில் இந்தி நுழைய முனைந்தபோதெல்லாம் அவர் சீறியெழுந்து போராடினர் ; சிறை புகுந்து வாடினர்.

13-11-1938இல் சென்னை ஒற்றைவாடை நாடக அரங்கில் மகளிர் கழகம் மாபெரும் இந்தியெதிர்ப்பு மாநாடொன்றை நடத்தியது. ஆசிரியர் மறைத்திரு மறைமலையடிகளார் திருமகளாரும், பன்னூல் ஆசிரியருமான தனித் தமிழ்த் திருவாட்டி **நீலாம்பிகையம்மையார்** அவர்கள் தாம் வாழ்ந்து வந்த திருநெல்வேலி — பாளையங் கோட்டையினின்றும் வருகைதந்து இம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர்கள். திரு. ஈ. வே. இரா. அவர்கட்குப் **'பெரியார்'** என்னும் பட்டம் இம் மாநாட்டில்தான் வழங்கப்பட்டது. மருத்துவர் திருவாட்டி **தருமாம்பாள் அம்மையார்** அவர்கள் அதற்கான கேடயத்தை வழங்கினர். இப் பட்டமே திரு. ஈ. வே. இரா. அவர்கட்கு மறையாப் பெரும்பெயராய் மன்னும் இயற்பெயராய் வழங்கி வருகின்றது.



நெடுங்காலமாகத் தன்னிலை மறந்து அயர்ந்துறங்கிக் கிடந்த தமிழினத்தைத் தட்டியெழுப்பும் பெருமுயற்சியில் ஈடுபட்டு அரும் பணியாற்றிய சிறப்புக்குரியவர் பெருந்தகையாளர் மறைத்திரு மறைமலையடிகளாராவர். பெரியார் அவர்கள் தாம் தலையெடுக்கு

முன்னரே ஆரியமாயையை எதிர்த்துத் தமித்து நின்று போராடி வந்த அடிகளார்பால் ஆர்ந்த பேரன்பும், பெருமதிப்புங் கொண்டிருந்தார். கரந்தைத் தமிழ்ச்சங்கப் பெருவிழா 24-7-1927இல் அடிகளார் தலைமையில் நடைபெற்றபோது ஆங்குச் சென்று அடிகளாரைக் கண்டு அளவளாவி மகிழ்ந்தார். அதுவே அடிகளார்க்கும் பெரியார்க்கும் நிகழ்ந்த முதல் சந்திப்பாகும். பெரியார் மேற்கொண்ட ஒப்பற்ற நற்பணிகளை அடிகளார் மனம்விட்டுப் பாராட்டிவந்தார். இருவருக்கும் கருத்து வேறுபாடுகள் பல இருப்பினும் தமிழின மேம்பாடு என்னும் உணர்வால் இருவரும் ஒன்றுபட்டு நின்றனர்.



22-7-1928இல் சென்னை—இராயப் பேட்டையில் நடைபெற்ற ஒரு பெருவிழா நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய மறைமலையடிகளார், தன்மான இயக்கத்தவரின் கடவுட் கொள்கையைக் கண்டித்துப் பேசினர். பேசவே, ஆங்கு வந்திருந்த அவ் வியக்கத்தினர் சிலர் கூட்டத்தில் குழப்பம் விளைத்தனர்; பின்னரும் இழித்தும், பழித்தும், எழுதியும், பேசியும் கலவரஞ் செய்துகொண்டிருந்தனர். இது தொடர்பாக உண்மை நிலையை விளக்கி அடிகளார் 24—8—1928 அன்று ஒரு கடிதம் வரைந்து பெரியாருக்கு அனுப்பினர். அது வருமாறு :

அன்புள்ள ஐயா !

நலம். தங்கள் நலத்தைத் தெரிவித்தல் வேண்டும். என்னைப் பற்றிய ஒரு குறிப்பு குடியரசு இதழில் வெளிவந்திருப்பதாகத் திருச்சித் திரு. விசுவநாதம் அவர்கள் வாயிலாக இன்று அறிந்தேன். சென்னைக் குகானந்த நிலையத்தின் ஆண்டுவிழா நிகழ்ச்சி முறையைப் பற்றித் ''திராவிடன்'' ''தமிழ்நாடு'' இதழ்களில் போந்துள்ள சில உரைகளை நம்பி அக் குறிப்புத் தங்களால் வரையப்பட்டதென அறிகின்றேன். தங்களுக்காவது தங்கள் இயக்கத்தைச் சார்ந்த அன்பர்கட்காவது எவ்வகையான தீங்கும் செய்ய அல்லது செய்விக்க வேண்டுமென்று யான் எண்ணியதுமில்லை ; யாண்டுஞ் சொல்லியதுமில்லை. தாங்கள் என்னை வேறுக நினைத்து என்மீது வருந்துதல் வேண்டாம். என்றாலும் கடவுளைப் பற்றியும்,

அடியார்களைப் பற்றியும் தாங்கள் கொண்டுள்ள கோட்பாடு களில் மட்டும் யான் கருத்து உடன்பாடுடையே னல்லேன். செய்தித்தாள்களில் வெளிவந்த சிலவற்றைப் பார்த்துத் தாங்கள் வருந்தியிருந்தால் அவ் வருத்தத்தைத் தாங்கள் அன்புகூர்ந்து நீக்கிவிடல் வேண்டும். தமிழ் மக்கள் முன் னேற்றத்தின் பொருட்டுத் தாங்கள் செய்துவரும் நன் முயற்சிகள் இனிது நடைபெறுக!

அனபுள்ள,

24—8—28.　　　(ஒ-ம்.)　மறைமலையடிகள்

இக் கடிதம் பெரியார் கைக்குக் கிட்டாமல் அலுவலகப் பொறுப்பாளர் ஒருவருக்குக் கிட்டியமையால், அவர் இதனையும் தம் போக்குக் கேற்பப் பயன்படுத்திக் கொண்டார்.

சுற்றுப்போக்கில் இருந்த பெரியாருக்கு இச் செய்தி எட்டவே, அவர் உடனே தம் இருப்பிடம் போந்து, இது தொடர்பாகத் தமது தாளிகையான குடியரசில் ஓர் ஆசிரியவுரை* வரைந்தார். அதில் அடிகளார்தம் புலமை நலங்களையும், அவர்கள் தமிழர்க் காற்றிய அரும்பணிகளையும் எடுத்துக்கூறி, அப் பெருந்தகையாளர்பால் தம் இயக்கத்தவர் முறைதவறி நடந்து கொண்டமைக்காக வருந்தி, எத்தகு வரையறவு (நிபந்தனையு)மின்றி மன்னிக்குமாறு தம் இயக் கத்தவர் சார்பில் அடிகளாரை வேண்டியிருந்தார். பெரியார்தம் பெருந்தகைமை இருந்தவாறு என்னே!

1938இல் சென்னையில் மறைமலையடிகளார் அவர்கள் தலைமையில் நடைபெற்ற மாபெரும் இந்தியெதிர்ப்பு மாநாட்டில் பெரியார் முனைந்து நின்று செயலாற்றிச் சிறப்பித்தார். இந்தி யெதிர்ப்புப் போராட்டத்தில் பெரும்பங்கு கொண்டமையால் அப் போதைய அரசு அவர்மீது வழக்குப் பதிவு செய்தது. அவ் வழக்குத் தொடர்பாக அறமன்றத்தில் தாம் அளித்த வாய்மொழியில்

> ''தமிழ்ப் பண்டிதரும் தமிழ்மொழி கலைகள் ஆகியவற்றில் வல்லுநருமான சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை யடிகள் 'இந்தி பொதுமொழியா' என்று கண்டித்து எழுதி யிருக்கிறார்கள்.''

என்று பெரியார் அவர்கள் அடிகளாரின் நூலைச் சுட்டிக்காட்டியுள் ளார்.

மறைமலையடிகளார் வரைந்த 'அறிவுரைக் கொத்து' என்னும் நூல் 1936 ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால்

*குடியரசு - மாலை : 4 - மலர் : 19.

இடைநிலை வகுப்பு மாணுக்கர்க்குப் பாடமாக வைக்கப்பட்டது. அதிலுள்ள 'தமிழ்நாட்டவரும் மேல்நாட்டவரும்' என்னும் கட்டுரையை எதிர்த்து ஒருசாரார் கிளர்ச்சி செய்தனர்; அந் நூலைப் பாடமாக வைக்கக்கூடாது என மறுத்துத் தாறுமாருக எழுதியும் பேசியும் ஆரவாரித்தனர். அதுகண்டு கொதித்தெழுந்த பெரியார், அடிகளார் கட்டுரையில் வரைந்துள்ளன யாவும் உண்மையே என்று வலியுறுத்தியும் மாற்ருர் கருத்தை ஆணித்தரமாக மறுத்தும் **மறுப்புக்கு மறுப்பு*** என்னும் தனி நூலொன்றை வெளியிட்டும், சென்றவிடமெல்லாம் இதுபற்றிப் பேசியும் எதிரிகளின் கொட்டத்தை அடக்கினுர்.

அடிகளார் வாழ்ந்த பல்லாவரத்திலுள்ள பொதுநிலைக்கழக வளமனை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் நன்முயற்சியால்



இப்பொழுது 'மறைமலையடிகள் கலைமன்ற'மாக விளங்கிவருகின்றது. இங்கு அடிகளார் பயன்படுத்திய, கையாண்ட பொருள்களும், அவற்றின் படிகள் சிலவும், அவற்றைப் பற்றியனவும், அடிகளாரின் வாழ்க்கைச் சிறப்புக்கள், அன்ருட நடைமுறைகள் முதலியன பற்றியனவுமான வரைவுகளும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. சென்னை இலிங்கிச்செட்டித் தெருவிலுள்ள மறைமலையடிகள் நூல் நிலையம் மட்டுமன்றி, இவ் வளமனையிலும் அடிகளார் பெயரில் ஒரு

* குடியரசுப் பதிப்பக வெளியீடு; எண்: 26.

படிப்பகம் நடைபெற்று வருகின்றது. கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் அவர்களின் வேண்டுகோளை ஏற்றுப் பெரியார் அவர்கள் 18—4—70இல் தாம் காஞ்சிபுரம் செல்லும் வழியில் அன்று பிற் பகல் 3 மணி அளவில் இக் கலைமன்றத்துக்குப் பெருமகிழ்ச்சியுடன் வருகை தந்து சிறப்பித்தார்கள். அப்போது பார்வையாளர் குறிப்பு ஏட்டில் பெரியார் அவர்கள் வரைந்துள்ள பாராட்டுரை வருமாறு:

"பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றம் பார்க்க நேர்ந்தது. மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். பல நூல்கள் ஒழுங்காக அமைந்திருக்கின்றன. இது மிகுதியும் பாராட்டத் தக்கது. தமிழ்மொழிக்குச் சிறப்பானவற்றை இவர்கள் நல்ல முயற்சி எடுத்துச் சேகரித்திருக்கிறார்கள். நன்றி!"

(ஒ-ம்.) **ஈ. வெ. ராமசாமி**
18-4-1970

தமிழ்க்குடியை மேம்படுத்தும் தனிப்பெரும் பணிக்குத் தம்மையே ஒப்படைத்துவிட்ட பெரியார்,

**"குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து**
**மானங் கருதக் கெடும்"**

என்னும் குறளுக்கு இலக்கியமாய்த், தனிமானம் நோக்காது தமிழினத்தின் தன்மானங் காக்கத் தலைப்பட்டார்; தன்மான உணர் வூட்டினார். மற்றவர்களால் செய்ய முடியாதவற்றையும், செய்தற்கு மட்டுமன்றிப் பேசுவதற்குங்கூட அஞ்சியவற்றையும் கூசியவற்றையும் துணிந்து முன்வந்து பேசினார்; பேசியவாறே செய்து காட்டினார்.

***"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்***
***செயற்கரிய செய்கலா தார்"***

என்னும் குறள் மொழிக்கேற்பச் செயற்கரிய செய்து பெரியார் என்னும் பெயர் விளங்க வாழ்ந்தார்.

குடும்பச் செல்வத்தையெல்லாம் கொள்கைக்காகச் செல விட்டவர் பெரியார். கட்குடியொழிப்புப் போரில் தம்முடைய தோப்பி லிருந்த 500 தென்னைகளை உடனடியாக வெட்டி வீழ்த்திய தொன்றே இதனை மெய்ப்பிக்கும். ஆயினும் இறுதிவரை கடைந் தெடுத்த சிக்கனக்காரராகவே வாழ்ந்தார். பொதுநலத் தொண்டில் ஈடுபடுவோர் எத்துணைச் சிக்கனமாக இருக்கவேண்டுமென்பதற்கு ஒப்பற்ற எடுத்துக்காட்டாக விளங்கினார். தொண்டர்கள் அன் புடன் தூசிதுரும்புகளை வழங்கினாலும் ஏற்றுக்கொள்ளும் பெரியார்,

பொருள் நசையால் கொள்கையை விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையரல்லர்.

> "எமைநத்து வாவென்று எதிரிகள் கோடி
> இட்டழைத் தாலும் தொடேன்"

என்னும் பாவேந்தர் **பாரதிதாசனரின்** முழக்கத்திற்கு மெய்யான விளக்கமாகத் திகழ்ந்தார். மக்களுக்குள் பிறப்பின் அடிப்படையிலேயே அளவற்ற ஏற்றத்தாழ்வுகள், எண்ணற்ற வேறுபாடுகள், சமவாய்ப்பு இல்லாமை, இவற்றின் அடிப்படையிலான எண்ணற்ற கொடுமைகள் யாவற்றுக்கும் காரணம் ஆரியச் சூழ்ச்சிகளே என்று திண்ணமாகத் தெளிந்தமையால் அவற்றை அழித்தொழிக்க முற்பட்டார். ஆனல், அவையெல்லாம் மதம், சடங்குகள், வேதங்கள் முதலியவற்றில் ஒளிக்கப்படுவதைக் கண்டார். ஆகவே அவற்றையும் ஒழித்துக்கட்ட முனைந்தார். அவையெல்லாம் கடவுளின் ஏற்பாடுகள், அமைப்புக்கள் எனப்பட்டமையால் கடவுட் கொள்கையையே எதிர்த்துச் செயற்பட்டார். தம் நோக்கம் நிறைவேறத் தடையாயிருப்பன எவையாயினும் அவற்றைத் தகர்த்தெறிவதே பெரியாரின் இயல்பு; அதுவே அவர்க்குரிய தனிச்சிறப்பு.

தமது நெடிய போராட்டத்தில் அவர் ஓவாது தமிழ்நாடு, தமிழினம் என்று முழங்கிய நாட்டுக்கும் இனத்துக்கும் அடிப்படையானது மொழியாக இருந்தும், பெரியார் தமிழையும் விட்டுவைக்கவில்லை. அது காட்டு விலங்காண்டி மொழியென்று கண்ணை மூடிக்கொண்டு சாடினர். அப்பொழுதாயினும் தமிழர்க்கு நல்லுணர்வு எழட்டும் என்று எண்ணினர் போலும்!

எழுத்துச் சீர்திருத்தம் முதல், கருவறைப் போராட்டம் ஈருன எண்ணற்ற துறைகளில் கிளர்ச்சி செய்து போராடித் தமிழினத்தைத் தலைநிமிர்த்துதற்குப் பெரியார் மேற்கொண்ட முயற்சிகள் ஏராளம்! ஏராளம்!! அவை விரிப்பிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்!

தமிழ்நாட்டில் அவர் காலடிபடாத பட்டி தொட்டிகள்கூட இல்லை. ஏறத்தாழ, கடந்த அறுபதாண்டுக் காலத்தில் தமிழின மேன்மையின் பொருட்டு அவர் குரல் ஒலிக்காத நாளில்லை. தமிழ்நாட்டில் அவரால் எவ்வகையிலேனும் சீண்டிவிடப்படாத அல்லது தூண்டிவிடப்படாத உணர்வுடையோர் எவருமே இலர்.

உலகப் பெருந்தலைவர்களுள் ஒருவரான தன்மானத் தந்தை பெரியாரின் நூற்றுண்டு விழா நிகழும் இவ்வாண்டில், அப்பெருமகனர்தம் நலமிக்க கோட்பாடுகள் நிறைவேறத் தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் உறுதிகொள்ளுதல் வேண்டும்!

———

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௨, பரல் ௧, ௨௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

நூற்பாவின் பொருள் :

அவனே தானே ஆகிய அந் நெறி - பிறவியின் முதல் நிலையில் இறைவனே உயிராகி அறிவை விளக்கி வந்த அந் நெறியே; ஏகனுகி - (அவ் வுண்மை உணர்ந்த பின்பு இறைவன்பால் திரும்பி மெய்யுணர்வு கொண்டு உயிர் இறைவனேடு சேர்ந்து இறைவனே எனச் சார்ந்ததன் வண்ணமாய் உணர்வு முறுகி அவனேடு ஒற்றுமைப்பட்டு) ஒருவனுகி; இறைபணி நிற்க - அந் நிலையில் எல்லாம் அருளால் நிகழ்வதாகிய இறைபணியில் நிற்றலால் ; மலமாயை தன்னெடு வல்வினை இன்றே - மலங்கள் மாயைகள் என்பவற்ருேடு வலிய ஊழ்வினையும் இல்லையாய் நீங்கும்.

அவனே என்பதன் ஏகாரம் பிரிநிலை; தானே என்னும் ஏகாரம் தேற்றம். சார்ந்ததன் வண்ணமாகி ஒற்றுமைப்பட்டு ஒரு பொருளாதலை 'ஏகனுகி' என்ருர். அந் நிலையில் உயிரின் செயலெல்லாம் அருளால் நிகழ்ந்து அருட்செயலாதலின், அவை 'இறைபணி'யாயின. 'தன்னெடு' என்றது, மலமாயை இரண்டையும் ஒன்ருக்கிக் கொள்ளுதலால் ஒருமையில் வந்தது. வினை எழுவாயாதலின் 'இன்று' என்னும் ஒருமையில் முடிந்தது. 'தொகுப்பு வினை' 'மேல் வினைகளெல்லாம் குரவர் தீக்கையாலும் அதனுற் பெறும் ஞானத்தாலும் மாய்ந்து, 'பிராரத்தம்' என்னும் 'உடல்ஊழ்' மட்டும் முன்னரே தீர்மானிக்கப்பட்டுத் தனித்து வலிவாய்த் தெரிதலின் 'வல்வினை' எனப்பட்டது; ஆயினும் தீக்கையால் ஓரளவாவது உடலூழ் மெலிந்து வரும்; பிறவியோடு அது கழிவதாதலால் அதனை ஒரு பொருளாகக் கொள்ளாமல், ஞானிகள் 'இறைபணி'யிலேயே நின்றுவிடுவர்.

இங்கே, இறைவனேடு ஒற்றுமைப்படுதல் என்பதில், பலர்க்கும் பல நினைவுகள் எழக்கூடும்.

குடம் உடையும்போது அந்தக் குடத்தின் உள்ளே உள்ள காற்று வெளியில் உள்ள காற்ருேடு ஒற்றுமைப்பட்டு விடுகிறது; அப்படி உடலில் உள்ள உயிர் உடல் உடைந்தால் எங்கும் விரவி

யுள்ள இறைவனோடு ஒரே பொருளாய் ஒற்றுமைப்படுதல் கூடு மாதலின், ஒற்றுமைப் படுதல் என்பது இப்படி 'ஒருபொருளாவதனுல்' ஒற்றுமைப்படுதலா ?

அல்லது, குச்சியை அசைப்பில் மகன் என்று நினைப்பது போல் திரிபுக் காட்சியால் (திரிபு அறிவால்) ஒற்றுமைப்படுதலா ?

மண்ணே குடம் என்பது போல ஒன்று திரிந்து வேறொன்ருகி ஒற்றுமைப்படுதலா ?

வெள்ளை நிறமும் தாமரையும் ஒன்ருேடொன்று பிரிக்க முடியாதபடி குண குணித் தன்மையால் ஒற்றுமைப்படுதலா ?

பாலும் நீரும் போலப் பிரிக்கப்படாதபடி சேர்வதனுல் [சையோ கத்தால்) ஒற்றுமைப்படுதலா ?

தீயும் இரும்பும் போல ஒன்றில் ஒன்று விரவுதலால் ஒற்றுமைப் படுதலா ?

கருடனும், கருடமந்திரம் செய்வானும் போலப் பாவனையால் ஒற்றுமைப்படுதலா ?

காய்ந்த இரும்பில் நீர் விட்டால் அது காணுமற் போய்விடு வதைப் போல ஒடுக்கத்தால் (இலயத்தால்) ஒற்றுமைப்படுதலா ?

பேயும் அது பிடியுண்டவனும் போல மருட்சியால் (ஆவேசத் தால்) ஒற்றுமைப்படுதலா ?

விறகில் தீ சேர்ந்து மறைந்திருப்பது போல விளங்காமையால் ஒற்றுமைப்படுதலா ?

ஞாயிற்றின் ஒளிக்குமுன் விளக்கொளி இருந்தும் ஞாயிற் ருெளி மேலிட்டிருப்பதுபோல மேலிட்டிருப்பதால் ஒற்றுமைப் படுதலா ?

ஓர் ஆணும் ஒரு பெண்ணும் சேர்ந்திருப்பதுபோலச் சேர்க்கை யால் ஒற்றுமைப்படுதலா ?

நண்பர் இருவர் தம்முள் இசைவு மிகுதியால் ஒற்றுமையாய் இருப்பது போல, நட்பினுல் ஒற்றுமைப்படுதலா ?

ஒரு பசுவும் ஒரு காட்டுப் பசுவும், ஒருவகைத் தோற்றத்தில் ஒத்திருப்பது போல, ஒப்புமையால் ஒற்றுமைப்படுதலா ?

'அவனே தானேயாகிய அந் நிலைமை' எப்படி ஒற்றுமைப் படுதல் என்று தெரியவேண்டும் என்ப.

பதிஞான நிலையில் உயிர் இறைவனோடு ஒற்றுமைப்படுதல் இவ் வகைகள் எவற்றோடும் சேராது. அது, இரண்டன்மை என்னும் 'அத்துவித' ஒற்றுமையாகும். இயல்பான இல்லற நிலையில் தலைவன் தலைவியர் தனித்தனியே உலவியிருந்தாலும் தம்முள் அன்புகொண்டு இரண்டன்மையாய் ஒற்றுமைப்படுதல் போன்ற ஒன்றும் அன்பு நிலை ஆது!

இந் நூற்பா இரண்டு பிரிவுகள் உடையது. 'அவனே தானேயாகிய அந் நெறி ஏகனாகி' என்பது ஒரு பிரிவு. 'இறை பணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை யின்றே' என்பது மற்றொரு பிரிவு.

முதல் பிரிவு :

இப் பிரிவில் உயிர் சிவத்தோடு சேர்ந்து 'ஏகனாதல்' உணர்த்தப்பட்டது. அது எதுபோல என்றால், பிறவிக் காலங்களில் சிவம் உயிரோடு சேர்ந்து உயிரேயாதல் போல என்பது. வேறொன்றையும் உவமை காட்டாமல் தகுதியான உவமையாக இருக்கும் பொருட்டு, உயிரின் அறிவு மாற்றமே இங்கு ஒன்றுக் கொன்று உவமையாகக் காட்டப்பட்டது. இக் கருத்தை ஆசிரியர் தமது மேற்கோளிற் புலப்படுத்தினார்.

(பிறவிக் காலங்களில்) பரமேசுவரன் இவ் வான்மாவாய் நின்றமை போல, (பிறவி விடுதலைக் காலத்திலும்) உயிர் அவனிடத்தில் ஏகனாகி நின்றது என்றார் ஆசிரியர்; இது, மேற்கோள்! உயிர் அவ்வாறு நிற்கவேண்டும் என்பதற்காக 'நிற்க' என்று ஆசிரியர் கட்டளையிட்டார்.

'ஞானம்' விளங்கி இறைவன் நிலையை அறிந்துகொள்வதொன்றே வீடுபேற்றுக்குப் போதுமே; மேலும் 'ஏக'னாவது, எதற்கு என்று, இங்கே 'சிவசமவாத சைவர்' முதலியோர், எண்ணக்கூடும். அதற்காக ஆசிரியர் ஒரு காரணமும் கூறினார். ஒற்றுமைப்பட்டால் மட்டும்தான், 'யான்' 'எனது' என்னும் செருக்கு அற்று அவனது சீபாதத்தை அணைய முடியும், அதற்காக அவ்வாறு 'நிற்கவே' என்றார். நிற்கவே என்பது 'ஏகனாகி நிற்கவே' என்றபடி. 'நிற்கவே' என்னும் ஏகாரம், 'நிற்றலால்' எனப் பொருள் தந்து காரண காரிய முறையில் நின்றது. 'புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதவுநவும்' எனவும், 'வேற்றுமைப் பொருள்வயின் உருபாவனவும்' எனவும் வரும் தொல்காப்பியத்தால் (735) இம் முறைமை கொள்ளப்படும்.

'யான்' 'எனது' என்னும் செருக்காவது, உலக மயக்கம்; இங்கே, செருக்கு என்பது அம் மயக்க அறிவை உணர்த்திற்று. 'அற்று அணையும்' என்பதும் காரணகாரியமாய் நின்றது.

இங்ஙனம் சிவ உணர்வு கொண்டு 'ஏகனாகி' நிற்றலால்; உலக அறிவு அற்றுப் போகின்றது; இறைவன் திருவடியை உயிர் அணைகின்றது! இங்கே 'யான்' எனத் தன்னை நினைத்தாலும் 'எனது' என உலகத்தை நினைத்தாலும் அப்படி நினைப்பதற்காக உயிர் தனியாகத் தோன்றிவிடுகிறது. ஏனென்றால், மனம் முதலியவற்றின் நினைவைப் பெறுதலால் என்க. சிவத்தை உயிர் உணரும்போது உயிரென்று தனியாகப் பிரியும்படி, தோன்றுவதில்லை. இறை உணர்வாகவே, உயிரின் உணர்வும் இருக்கிறது!

ஏனென்றால், இறைவன் அறிவதோடு மட்டுமல்லாமல் அவனோடு ஏகனாகியும் நின்றுவிடுதலால் என்பது. ஏகனாதல் வீடுபேற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சி; அப்படி ஆனால் மட்டுந்தான் பெருமானது பேரின்பத்தை, அது நுகரத் தொடங்குதல் இயலும்; பேரின்பத்தை நுகர்தலே 'சீபாதத்தை அணைதல்' என்பது; 'திருவடிப் பேரின்பம்' எனப்படுதலும் இங்கு நினைவு கூர்க.

உலகப் பொருள்களின் சிற்றின்பங்களை நுகர்வதற்கு அப்பொருள்களோடு, ஒன்றாக வேண்டிய கட்டாயமில்லை. 'தான்' எனவும் 'உலகப் பொருள்' எனவும் அந் நிலையிலும் உயிர்க்கு நினைப்பு இருக்கும். ஏனென்றால் உலகப் பொருள்கள் அறிவில்லாதவை; உயிர் அறிவுள்ளது. இரண்டும் ஓரினமல்ல; சிவசத்தோடு ஒன்றாகும்போது, இரண்டும் அறிவின் இனமாதலால், உயிர் எளிதில் ஒன்று கூடி ஏகனாகி விடுகின்றது.

ஒரு விளக்கச் செய்யுள் :

*"நான் அவன் என் றெண்ணினர்க்கு நாடுமுளம் உண்டாதல்*
*தான்என ஒன் றின்றியே தான் அதுவாய்—நான்எனவொன்*
*றில்லென்று தானே எனும்அவரைத் தன்அடிவைத்*
*தில்லென்று தான் ஆம் இறை."*

**பொருள் :**

நான் அவன் என்று எண்ணினர்க்கு - பிறவி நிலையில் அறிவு முறையில் 'நானே அவன்' என்று எண்ணினவர்களுக்கும்; நாடும் உளம் உண்டாதல் - அப்படி அறிகின்ற உயிர் என ஒன்று தனியே உண்டாதலால் தான் என ஒன்று இன்றியே தான் அதுவாய் -

முதன்மையான பொருள் என்று தான் தோன்றுதபடியே இறைவன் அவ்வுயிரினறிவாய் (வீடுபேற்றிலும்) நின்று; நான் என ஒன்று இல்லென்று தானே எனும் அவரை - உயிர் என ஒரு பொருள் இல்லையென்று சொல்லும்படியும், தானே உயிர் என்று சொல்லும் வகையிலும் ஒன்றுகி; இறை - ஆண்டவன்; தன் அடி வைத்து - தன் உணர்வில் நிறுத்தி; இல் என்று தான் ஆம் - தனியொரு பொருளாக உயிர் இல்லையென்னும்படி அவ்வுயிராவான்.

'ஆய் ஆம்' என்று முடிக்க; 'ஆகி ஆவான்' என்னும் இக் கருத்து பிறவி நிலையில் உயிரின் அறிவாகி, அருள் நிலையில் அவ் வுயிர்க்கு உணர்வாதலை உணர்த்திற்று. நாடும் உளம் உண்டாகிய அறிவு நிலையில், உயிர் பிரிந்து தெரிகிறது. அதற்காக 'உளம் உண்டாதலால்' என்று கூறிக்கொண்டார். அப்படி உயிர் தன்னைப் பிரித்தறியும்போது இறைவன் இல்லாதது போலவே அவ்வுயிரினுள் ஒளிந்திருக்கிருன். 'மறைந்திருந்தாய் எம் பெருமான்' எனவும், 'உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே' எனவும், 'தோன்றுப் பெருமையனே' எனவும், 'போக்கும் வரவும் புணர்வு மிலாப் புண்ணியனே' எனவும், 'காண்பரிய பேரொளியே' எனவும், 'என் சிந்தனையுள் ஊற்ருன உண்ணுர் அமுதே' எனவும் மாணிக்க வாசகர் தம் சிவபுராணத்தில் கூறுவார்.

வீடுபேற்றில் அதுபோலவே உயிரென ஒன்று இல்லை யென்னும்படி, இறைவனே மேலிட்டு உயிரேயாய் விளங்குவான். 'நானென ஒன்று இல் என்று' என்பதிலும், 'தன்னடி வைத்து இல்லென்று' என்பதிலும் 'இல்' என்று வந்தது, உயிரின் உணர்வை; எண்ணினர்க்கும் என இறந்தது தழீஇய எச்ச உம்மை விரித்துக் கொள்ளப்படும்; எண்ணுதவரையும் அது குறித்தது; அவ்வும்மை தொக்கு நின்றது, சந்தியினுல் என்க.

பிறவி நிலையில் உயிர் உலகத்தோடு சார்ந்ததன் வண்ண மாய் இரண்டன்மையாய்ச் சேர்ந்திருந்தும், மனம் என்பது தோன்றிப் பிரிவாய் நினைக்கிறது; அது, அறிவு நிலையின் இயல்பு; பகுத்தறிவது, அறிவின் வண்ணம்! வீடுபேற்று நிலையில் இறைவன் ஒருவனையே நினைக்கிறது; தன்னைப் பிரித்தறிவதில்லை. காரணம், இறைவனும் உணர்வுடையனுய் ஒன்றுதலாலும், சிறிய உயி ருணர்வைப் பெருகிய தன் உணர்வில் அடக்கிக்கொண்டு தானே மேலிடுதலாலும் என்க. இது, உணர்வு நிலையின் இயல்பு; ஒன்றி அடங்குவது உணர்வு நிலையின் வண்ணம்! தன்னையும் உலகத் தையும் பிரித்தெண்ணுமையோடு, இன்பம் தரும் இறைவனையும் மறந்து பேரின்பமே உணர்வாய் உயிர் ஏகனுகி நிற்கும்.

அந்நிலையில், ஏனை உயிர்களையும் உலகத்தையும் சிவ வழி பாட்டுப் பேரின்பக் களங்களாகக் கொண்டு, பேரின்ப உணர் விலேயே அப் பக்குவ உயிர் தொண்டு செய்து வருகிறது. அவை, இறைபணிகளாகின்றன; ஏகனாகியதன் பயன் இது!

இரண்டாம் பிரிவு:

இப் பிரிவு, 'இறைபணி' கூறுவது; 'இறைபணி வழுவாது நிற்க' என்பது இதன் மேற்கோள். ஒரோவொருகால், அருள் வழியாகத் தொண்டுகளை நிகழ்த்தாமல் பொருள் வழியாக நிகழ்த்து தலுங் கருதி, 'வழுவாது நிற்க' என்றார்.

மேற்கோளுக்கு ஆசிரியர் கூறிய காரணத்தில், 'அருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே, அவனுக்கு ஆணவம் மாயை என்னும் மலங்களும் உடல் ஊழ் என்னும் வினையும் (பிராரத் துவமும்) தடையாக வந்து தாக்கமாட்டா' என்றார். 'யான்' 'எனது' என்னும் ஆணவச் செருக்கு அறுதல், முதற் பிரிவில் அறியப்பட்டது. இந்தப் பிரிவில், மாயையும் கன்மமும் இல்லை யாதல் விளங்கியது. மாயைக்குக் கூறிய அஞ்ஞானம் என்பது, மாயையின் மயக்கத்தை யுணர்த்தும். 'அஞ்ஞானமும் கன்மமும்' என்று உம்மைத் தொகையில் வந்தன. காரணத்தில், 'பிரவேசியா' என்று வந்தமையால் தாக்காமை தெரிந்தது. உடல் ஊழாகிய கன்மமும் மாயையான் மயக்கமும், உடல் உள்ள வரையிலுங் கூடத், தம்முடைய வலிய தாக்குதற்கு இடனில்லாமல், மெலிந்து போம் என்று புலப்படுத்தியபடியாயிற்று.

சில விளக்கச் செய்யுட்கள் இப் பிரிவுக்கு வருகின்றன. விளக்கங்களில், உவமைகள் காட்டப்படுதலும் இயல்பு.

"நாமல்ல இந்திரியம், நம்வழியின் அல்லவழி,
நாமல்ல, நாமும் அரனுடைமை;—ஆமென்னில்,
எத்தனுவில் நின்றும் இறைபணியார்க் கில்லைவினை;
முற்செய்வினை யுந்தருவான் முன்."

இவ் விளக்கச் செய்யுள் ஓர் ஐயத்துக்கு விடை கூறுகின்றது. 'உடல் ஊழாய் வருவது அவ்வுடலில் அதனை நுகர்வதற்குமட்டும்; உடல் ஊழை நுகரும்போது மறு பிறவிகளுக்குரிய மேல் வினை களையும் மக்கள் செய்துவிடுகின்றனர். அவ்வாறிருக்கும்போது, இறைபணியாளர்க்குமட்டும் அவை பிரவேசியா என்பது எப்படி?' இது, ஐயம்.

**பொருள் :**

நாம் அல்ல இந்திரியம் - பொறிகள் உயிரல்ல; நம் வழியின் அல்ல - அவை தொழிற்படும் வகைகளும் முதல்வன் வழியிலேயே யன்றி உயிரின் வழியின் அல்ல; வழி நாமல்ல - அவை இயங்கும் புலன் முதலிய வழிகளும் உயிர் வழியில் அல்ல; நாமும் அரன் உடைமை - உயிர்களும் ஓர் உரிமையின்றி அரனுக்கு உடைமை யாய் அவன் வழியில் அடிமையாய் இருக்கின்றன; ஆம் என்னில் - இக் கருத்துக்கள் உண்மை என்றால், (அதாவது எல்லாம் அருள் வழியிலென்றால்); இறை பணியார்க்கு - அருள் வழியே செல்லும் இறைபணியுடையராகிய உயிர்களுக்கு; வினை இல்லை - வினையாதல் இல்லை; முன் செய்வினையும் - முன் பிறவிகளிற் செய்யப்பட்டு இப் பிறவியில் வந்த உடலூழ் வினையும்; தருவான் முன் - அவற்றை உயிர்களுக்குச் சேர்ப்பவனாகிய இறைவன் திருமுன்னிலையில்; எத்தனுவில் நின்றும் இல்லை - எவ்வகை உடலின் பிறப்பில் எத் தொழில் செய்துகொண்டிருந்தாலும், அவை பந்தமாதல் இல்லை.

தொகுப்பு வினை (சஞ்சித வினை), குரு எழுந்தருளியபோதே தீக்கையினால் எரிசேர்ந்த வித்துப் போல எரிந்து இல்லையாய் விட்டது. அதனால் அதைப்பற்றி இங்கே குறிப்பில்லை. வினை இல்லை என்றது, வினையாக முடிதல் இல்லை என்றபடி. 'முன் செய்வினை' என்றது, முற் பிறவியிற் செய்து இப் பிறவிக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட உடலூழ்; தருவான் என்றார், அவற்றை அளந்து தருகிறவன் இறைவன் என்னும் பொருட்டு. 'தருவான் முன் இல்லை' என்றது, மேலும் மேலும் அது பெருகும் என்றாலும் அவற்றைத் தரும் ஆதிக்கமுடையவன் இறைவனேயாதலின், அவனுக்கு முன் இவ்வுடலூழும் இல்லையென்று விளக்கியபடி; மெலியும் என்பதற்கு 'இல்லை' என வந்தது. 'இல்லை' என்னும்படி அவ்வளவு மெலிந்துவிடும் என்பது கருத்து. பேராற்றல் வாய்ந்த இறைவன் திருமுன்; உடலூழ் அவ்வளவு ஆற்றலாய் நிகழா தென்றபடி; 'தருவான்முன்' என்றது காண்க. 'இல்லை' என்ப தைப் பின்னுங் கூட்டுக.

மனித உடம்பு பலவேறுபட்டுப் பலவேறு வகையிற் செயல் படுதலாலும், தூல உடம்பிலும் நுண்ணுடம்பிலும் செயல் நிகழ்வ தாலும், அவற்றில் மனிதராயும் தேவராயும் இருந்து செயல் பெறுதலாலும் எத்தனுவில் நின்றாலும் ஏதவத்தைப் பட்டாலும் என்று கருத்தாயிற்று. 'நின்றும்' என்னும் உம்மை சிறப்பு.

*"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்*
*சார்ந்தாரைக் காத்தான் சலம்இலனைச்—சார்ந்தடியார்*

*தாந்தானுச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்*
*ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு.''*

**பொருள் :**

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன் - தம்மை முதன்மையாகக் கருதி வந்து அடைக்கலமாக அடைந்தவரை இடுக்கண் நீக்கிப் பாதுகாத்தல் தலைமைக் குணம் உடையார் கடமையாகும்; ஆதல் - ஆதலால்; சார்ந்தாரைக் காத்தும் - அடைந்தவரைப் பாதுகாத்தும்; சலமிலனாய் - நடுநிலை பிழைத்த குற்றம் இல்லாதவனாய்; சார்ந்த அடியார்தாம் தானுச்செய்து - தன்னைச் சார்ந்த அடியார்களைத் தன்னைப்போல் ஆக்கிக்கொண்டு; பிறர் - மற்றவர்களுக்கு; தங்கள் வினை தான் கொடுத்தல் - அவரவர் செய்வினைகளை இறைவன் அவரவர்க்குக் கொடுத்தலேயாம்; ஆய்ந்தார் - நுணுகி ஞான முணர்ந்தவரது, முன் செய்வினையும் - முற் பிறவிகளிற் செய்த உடலூழும்; ஆங்கு - அப்படியே; (அவ்வாறு நடு நிலையாய், தன்னைச் சார்ந்தார்க்கும் கொடுத்ததே).

இச் செய்யுளில், சார்ந்தாரைக் காத்தல் தலைவரெனப்படுவோர்க்குக் கடமையாதலால், தன்னையே உணரும் பதிஞான உயிர்களைக் காப்பாற்றுதல் (அதாவது தானுகச் செய்துகொள்ளுதல்) இறைவனது நடுநிலைமைக்குக் குறையாகாது. சலமிலன் - வஞ்சனையில்லாதவனாகிய கடவுள்; எல்லா உயிர்களுக்கும் நடுநிலையாளனாய்த்தான் கடவுள் இருந்துவருகிறான்.

உலகத்தைவிட்டுத் தன்னையே உணர்கிறவனை இறைவன் தானுக்கிக் கொள்ளவேண்டாமா? மற்ற உயிர்கள் அங்ஙனம் செய்யவில்லையே என்று இரக்கங்கொண்டுதான் பெருமான் இயங்குகிறான்; செய்வினைகளுக்கு ஏற்ற செய்தியாய் அவரவர்களுக்குப் பிறவி கொடுக்கிறான்; இவையெல்லாம் அவரவர் நிலைமைக்கேற்றபடி இறைவன் வஞ்சனையில்லாமற் செய்வதேயாதலால், இறைவனை நடுநிலையற்றவனாகக் கருதுதலில் தவறு உண்டாகிறது. ஒருசிலர்க்கு இன்பம் கொடுப்பதும், பலர்க்குத் துன்பம் கொடுப்பதும், மிகச் சிலர்க்கு அவ் விரண்டும் இல்லாதபடி செய்து பேரின்பம் வழங்குவதும், அவரவர் நிலைமை கருதினவையேயன்றி இறைவன் நடுநிலை இல்லாதவன் என்பதன்று. இப்படிச் சிலர் நினைத்தமையால், ஆசிரியர் இச் செய்யுளைக் கூறவேண்டியதாயிற்று.

(தொடரும்)

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(முன்னிதழ் கஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

முகம் என்னுஞ் சொல்லிற்குத் தோற்றம் அல்லது முன் பக்கம் என்பதே அடிப்படைப் பொருள். வடமொழியாளர் அதற்கு வாய் என்பதை அடிப்படைப் பொருளாகக் கொண்டு, அதற்கேற்பப் பொருந்தாப் பொய்த்தலாக ஒரு கரணியங் காட்டுவர்.

முகம்—முகடு = 1. உச்சி. ''முகடுதுமித் தடுக்கிய பழம்பல் லுணவின்'' (பெரும்பாண். 246). 2. உயர்வு. ''முனிமை முகடாய மூவா முதல்வன்'' (சீவக. 1609). 3. தலை. ''முகடூர் மயிர்கடிந்த செய்கையாரும்'' (தேவா. 936 : 10). 4. முதுகுப்புறம். ''சொல்லத் தகுமுகட் டொட்டகம்'' (கனு. 15). 5. வீட்டின் மேற்கூரை. (W). 6. முகட்டுவளை. ''இகழ்ந்தார் முகட்டுவழி கட்டிற்பாடு'' (ஆசாரக். 23). 7. வான்முகடு. ''வானெடு முகட்டை யுற்றனன்'' (கம்பரா. மருத்து. 30).

க. தெ. மொகடு (g).

முகடு—முகடி = முகட்டில் தங்குவதாகக் கருதப்படும் மூதேவி. ''மடியுளாள் மாமுகடி யென்ப'' (குறள். 617).

முகம் = முகத்தில் முன் நீண்டுள்ள மூக்கு. முகம்—முக, முகத்தல் = மூக்கால் முகர்தல்.

முக—மோ. ''மோப்பக் குழையு மனிச்சம்'' (குறள். 90).

மோ—மோப்பு—மோப்பம்.

முகதலை = பெண்டிர் சேலை முகப்பு (முன்றானை).

முக—முகப்பு = 1. முன்னிலை. ''இருந்திடா யெங்கள் கண் முகப்பே'' 2. முற்பகுதி. 3. வீட்டின் முன் கட்டிடம். ''முகத் தணிந்த முகப்பு'' (அரிச். பு. இந்திர. 20). 4. அணிகலப் பொருத்துவாய். 5. முகதலை.

முகம்—முகமன் = 1. மதிப்புறவுச் சொல், பாராட்டுரை. ''முன்னையிற் புனைந்து முகமனளித்தும்'' (கல்லா. 13). 2. வழுத்து.

"புகழ்ந்துமுன் னுரைப்பதென் முகம்மனே" (தேவா. 863 : 3). 3. முகத்தெதிர் உயர்வு நவிற்சி.

முகமாதல் = உடன்படுதல். (சீவக. 1120, உரை).

முகமை = முதன்மை, தலைமை. முகமையாயிருந்து எடுத்து நடத்தினான். முகமை—முகாமை.

முகம்—முகர். முகர்தல் = மோத்தல். முகர்—மோர்.

முகர்—முகரி = 1. முன்புறம். 2. தொடக்கம். 3. தலைமை. 4. மூக்கினடி.

முகரி—முகரிமை = 1. தலைமை. "முகரிமை யடைந்தவன் றேல்முகத்தவன்" (கந்தபு. கயமுகனுற். 49). 2. பேரறிவு. "முகரிமை சானற்றவர்" (சேதுபு. பலதீ. 30).

முகர்—முகரை = 1. முகம். (இழிவுக் குறிப்பு). அவன் முகரையைப் பார் (உ. வ.). 2. முகவாய்க்கட்டை. 3. மூக்கினடி. "முகரையா லுழுத தொய்யில்" (திருக்காளத். பு. கண்ணப்ப. 3).

தெ. மோர, க. மோரெ, இந். முக்ரா (kh). 4. மூக்கல்லாத முகப்பகுதி. அவன் மூஞ்சி முகரையெல்லாங் கரி. (உ. வ.).

முகரைக் கட்டை = 1. முகவாய்க் கட்டை. 2. பொலிவற்ற முகம்.

முகரை—மோரை = 1. முகம். 2. முகவாய்க் கட்டை.

முகவணை = 1. முகப்பு. 2. முகவுரை. 3. வண்டியின் முகப்பில் வண்டிக்காரன் இருக்குமிடம். 4. முகவணைக் கல். "நிலைகால் அருகணை முகவணை......கட்டினதும்" (கோயிலொ. 138).

முகவணைக்கல் = வாசலின் மேலுள்ள உத்தரப் படிக்கல் (W).

முகவழி = மூலம். அவன் முகவழியாகப் போகவேண்டும்.

முகவாசல் = தலைவாசல்.

முகவாய்—மோவாய். முகவாய்க் கட்டை—மோவாய்க் கட்டை.

முகவன் = ஒரு குழும்பின் படிநிகராளி (Agent).

முகவியர் = இன்முகமா யுள்ளோர். "முன்பட்ட தொழிந்து நுங்கண் முகவியர் முனிவு தீர்ந்தார்". (சீவக. 2045).

முகவு = மாளிகை முகப்பு.

முகவெட்டி = ஓர் அலுவலன். (S. I. I. iii, 118).

முகம்—முகன்—முகனை = 1. முன்புறம். 2. தொடக்கம். 3. முன்னெழுத்து. 4. முன்சினம். ஏன் இவ்வளவு முகனை உனக்கு? (இ. வ.). 5. அதே நேரம். (தக்ஷணம்). நான் வந்த முகனையிலே அவன்போய் விட்டான். (W.). 6. தலைமை. அவன் முகனை பண்ணுகிறான். (W.).

முகனை—மோனை = மோனைத் தொடை. ''மோனை யெதுகை முரணே யியைபென'' (தொல். செய். 87). 2. முதன்மை. ''மோனை மங்கலத் தியற்றுவ'' (உபதேசகா. சிவபுண். 63).

முள்—மொள்—மொழு—மொகு—மொக்கு = 1. பூமொட்டு. 2. ஆடைகளில் மொக்குப் போற் செய்யப்படும் வேலைப்பாடு. 3. நிலத்திலிடும் பூக்கோலம். 4. குத்து விளக்கின் தகழி (W).

மொக்கு—மொக்குள் = 1. மலரும் பருவத் தரும்பு. ''முகை மொக்கு ளுள்ளது நாற்றம்போல்'' (குறள். 1274). 2. நீர்க்குமிழி. 'படுமழை மொக்குளின்'' (நாலடி. 27). க. முகுள் (g).

மொக்குள்—மொக்குளி. மொக்குளித்தல் = 1. குமிழியுண்டா தல். (W.). 2. திரளுதல். (யாழ். அக.) க. முக்குளிசு.

மொக்குளிப்பான் = கொப்புளிப்பான், அம்மைக் கொப்புளம்.

மொக்கை = முகம்.

முள்—மள்—மள்ளன் = இளைஞன். ''பொருவிறல் மள்ள'' (திருமுரு. 262).

மள்—மழ = 1. இளமை. ''மழவுங் குழவும் இளமைப் பொருள'' (தொல். உரி. 14). 2. குழந்தை. ''அழுமழப்போலும்'' (திருக்கோ. 147).

மழ—மழவு = 1. இளமை. 2. குழந்தை.

மழவு—மழவன் = 1. இளைஞன். ''மழவர்த மனையன மண வொலி'' (கம்பரா. நாட்டுப். 50).

மழ—மழல்—மழலை = 1. இளமை. ''பெருமழலை வெள்ளேற் றினர்'' (தேவா. 579 : 5). 2. புதுமை. ''மழலைத்தேன்'' (ஈடு, 6 : 2 : 5). 3. திருந்தாச் சொல். ''தம் மக்கள் மழலைச்சொற் கேளா தவர்'' (குறள். 66). 4. மென்மொழி. ''மழலைவா யின் முறுவற் றையலாள்'' (சீவக. 181).

மழலை—மதலை = 1. மழலைமொழி. (W). 2. குழந்தை 3. மகன். (பிங்.).

மழல்—

மழல்—மழறு. மழறுதல் = மென்மையாதல். ''மழறுதேன் மொழியார்கள்'' (திவ். திருவாய். 6 : 2 : 5).

மழ—மட—மடம் = 1. இளமை. ''அஞ்சன் மடவனமே'' (நள. சுயம். 27). 2. மென்மை. ''தெளிநடை மடப்பிணை'' (புறநா. 23). 3. அழகு. ''மடக்கணீர் சோரும்'' (சிலப். 17. உரைப்பாட்டு மடை). 4. அறியாமை. ''மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்'' (சீவக. 1927). 5. கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை, மகளிர் குணம் நான்கனுள் ஒன்று. ''வாலிழை மடமங்கையர்'' (புறநா. 11).

மட—மடப்பு—மடப்பம் = மடம்.

மடம்—மடந்தை = 1. பெண்டு. ''இடைக்குல மடந்தை'' (சிலப். 16 : 2). 2. இளம்பெண் பருவம் ஏழனுள் ஒன்று, 14-19 அகவைப்பட்டது (பிங்.).

தெ. மடந்தி, க. மடதி.

மடவரல் (மடம் வரல்) = 1. மடப்பம். ''மடவர லுண்கண் வாணுதல் விறலி'' (புறநா. 89). 2. பெண்டு. ''மடவர னோக்கம்'' (குறள். 1085).

மடவன் = அறிவிலான். மடவள் = அறிவிலாள்.

மடவார் = 1. மகளிர். 2. மூடர்.

மழ—மக = 1. இளமை. (யாழ். அக). 2. பிள்ளை, குட்டி. ''மந்திம்மக'' (சீவக. 1897). 3. மகன், மகள். ''மகமுறை தடுப்ப'' (மலைபடு. 185).

மக—மகன் (க. மதம்) = 1. ஆண் குழந்தை. 2. புதல்வன். ''தன்மகன் ருயுயர்வும்'' (தொல். கற். 31). 3. ஆடவன். ''செய்ந் நன்றி கொன்ற மகற்கு'' (குறள். 110). 4. மாந்தன். 5. சிறந் தோன். ''நூல்கற்ற மகன்றுணையா நல்லகொளல்''. (நாலடி. 136) 6. போர்மறவன். ''வேந்தன் மனம்போல் வந்த மகன்'' (பு. வெ. 2 : 5). 7. கணவன். ''நினக்கிவன் மகனுத் தோன்றிய தூஉம்'' (மணி. 21 : 29). தெ. மகண்டு.

மக—மகள் = 1. பெண் குழந்தை. 2. புதல்வி. ''நல்கூர்ந் தார் செல்வ மகள்'' (கலித். 56). 3. பெண்டு. ''ஆயமகள் நீயா யின்'' (கலித். 107). 4. மனைவி. ''மனக்கினி யாற்கு நீமகளாய தூஉம்'' (மணி. 21 : 30).

மகள்—மகடு—மகடூஉ. ''மகடூஉ வறிசொல்'' (தொல். சொல். 2).

மக—மகவு=1. குழந்தை. ''மகவு முலைவருட'' (கம்பரா. தைல. 13). 2. குரங்கின் குட்டி. (தொல். மர. 14).

மகன்—(மகர்)—மகார் (பலர் பால்)=1. புதல்வர். ''அவுணர் கோன் மகார்'' (கந்தபு. மூவாயிர. 58). 2. சிறுபிள்ளைகள். ''இளந்துணை மகாரின் ' (பதிற்றுப். 71 : 7).

மகார்—மார் (பலர் பாலீறு). எ - டு. அண்ணன் மார், தாய் மார்.

மகள்—மகளிர் (பலர்பால்)=பெண்டிர் ''வசையில் வாழ்க்கை மகளிர் மலைத்த லல்லது'' (புறநா. 10).

மகன்—மான்—மன் (ஆண் பாலீறுகள்).

எ - டு : பணிமகன், பெருமான், செறுமன்.

மகள்—மாள் (பெண்பா லீறுகள்).

எ - டு : பணிமகள், வேண்மாள்.

மக+கள்=மக்கள் (மரூஉப் புணர்ச்சி).

மக்கள்—(இருபாற் பொதுப் பலர்பாற் பெயர்)=1. சிறு பிள்ளைகள் : எ - டு. ஆண்மக்கள், பெண்மக்கள், இருபால் மக்கள். 2. வளர்ச்சியுற்ற மாந்தர். எ - டு. ஆண்மக்கள், (ஆடவர்), பெண்மக்கள் (பெண்டிர்), இருபால் மக்கள் (இருபான் மாந்தர்).

*''மக்கள் தாமே ஆறறிவுயிரே''.* (தொல். மர. 33)

*''உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே''* (தொல். கிளவி. 1)

என்று தொல்காப்பியங் கூறுவதால், இலக்கண நூலிலும் அற நூலிலும் பண்பட்ட மாந்தரே மக்களென்றும், பண்படா மாந்த ரெல்லாம் மாக்களென்றும், குறிக்கப்படுவரென்பது போதரும்.

எ - டு :

*''விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்*
*கற்றாரோ டேனை யவர்''.* (குறள். 410)

*''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்*
*அவியினும் வாழினு மென்.''* (ஷ. 420)

மகன் என்னும் தென்சொல், கோதிய (gothic) மொழியில் மகுஸ் (magus) என்றும், கேலிய (Gaelic) மொழியில் மக் (mac) என்றும், திரிந்து வழங்குகின்றது.

"Mac (mak) A Gaelic word signifying son, and prefixed to many surnames, as Mac Donald, Mac Grigor, &c. It is synonymous with *Son* in names of Tentonic origin......It is allied to Goth *magus*, a son, fem. *magaths* (G. *magd*, a maid)". I. D. E. L. Vol. III, p. 91.

Gadhelic (Gaelic), a. Of or pertaining to that branch of the Celtic race which comprises the Erse of Ireland, the Gaels of Scotland and the Manx of the Isle of Man.

—The Imperial Dictionary of the English Language, Vol. II, p. 352.

*Goth*, n. One of an ancient Teutonic race of people, first heard of as inhabiting the shores of the Baltic.—Do. p. 413.

Mac என்னும் கேலியச்சொல் Mc என்று குறுகியும் வழங்கும்.

எ - டு: Mc Adam.

மகன்—மான்—மன் = மாந்தன்.

மன்பது = மக்கட் டொகுதி. "மன்பது மறுக்கத் துன்பங் களை வோன்" (பரிபா. 15 : 52).

மன்பது—மன்பதை = 1. மக்களினம். "மன்பதை காக்குநின் புரைமை" (புறநா. 210). 2. படைமக்கட் டொகுதி. "மன்பதை பெயர" (பதிற்றுப். 77 : 3).

மன்—Teut. *man*, *Skt*, manu.

"*MAN*, a human being. (E). *ME. man*, Chaucer, C. T. I. 43. *AS. mann*, also *mon*; Grein, ii. 105+Du *man*; *Ice. madr* (for *manur*); also *man*; *Dan mand* (with excrescent d); *Goth. manna*; *G mann*; [the *G. mensch* = *mannich*, i. e. mannish, human]. Allied to *Skt manu*, Vedic *manus-*, a man. B. connected by some with *Skt. man*, to think. See *Mind*. But it is unlikely that the orig Sense could have been 'thinker.'

Skeat's Etymological Dictionary of the English Language, p. 358.

மன்—வ. மநு.

மநு, thinking creature, man, Manu.

மநுஷ, a man.

மநுஷீ, a woman.

மநுஷ்ய, human, manly; human being, man.

மநுஷ்வத், as a man.

மந்வந்தர (nt), age of a Manu.

மாநவ, descended from or belonging to Man or Manu.

மாநவஸ்ய, to act like man.

மாநவீய, descended or derived from Manu.

மாநுஷ்ய, human nature or condition.

—Monier William's Sanskrit-English Dictionary: Man என்னும் ஆங்கிலச் சொல்லையும் மநு என்னும் சமற்கிருதச் சொல்லையும் முறையே mind. மநஸ் என்னும் சொற்களோடு தொடர்பு படுத்தி thinking animal, thinking creature என்று மேலையர் சிலர் பொருள் கூறுவர். அது தவறென்பது அடுத்த கட்டுரையில் விளக்கப்படும்.

## இடைச் சேர்ப்பு

முகு—முக்கு = இருதெரு கோணம்படக் கூடும் மூக்குப் போன்ற மூலை. முக்குவேறு; முடுக்கு (சந்து) வேறு.

முக்கு—முக்கை = ஆறு திரும்பும் அல்லது ஈராறு கூடும் இடத்து முக்குப் போன்ற மூலை.

முக்கு—மூக்கு = 1. முகத்தின் முன் நீண்டுள்ள உறுப்பு. 2. பறவை யலகு. 3. யானைத் துதிக்கை. 4. கலங்களின் வாயில் மூக்குப்போல் நீண்டுள்ள உறுப்பு. 5. இலைநுனி. 6. கொண்டைக் கடலைப் பயற்றின் முனை. 7. வித்தின் முளை. 8. வண்டிப்பாரின் மூக்கு வடிவான முனைப்பகுதி.

ம, தெ, து, மூக்கு, க. மூகு (g).

மூக்கு—மூக்கன் = 1. எடுப்பான மூக்குள்ளவன். 2. மீன் கொத்தி.

# தெய்வசிகாமணிப் புலவர்

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

சிவகங்கை வீர மறவரின் வித்தகக் கோட்டை தமிழ்ப் புலமையின் சங்கமாளிகை. கவிக்கலையின் கவின்பொழில். சோழன் நாடு கடத்திய கம்பன், இங்கே மறவர் ஆதரவில் வாழ்ந்தான். அவன் இறுதிமட்டும் வாழ்ந்த நாட்டரசன் கோட்டையை நாங்கள் **பாட்டரசன் கோட்டை** என்பதுண்டு. அது சிவகங்கையிலிருந்து நான்கு கல் தொலைவில் உள்ளது. அங்கே கம்பர் கல்லறை உள்ளது. தொண்டிக்குப் போகும் கட்டை வண்டிகளின் தெம்மாங்கு இரவிற் கேட்கும். இராமேசுரம் செல்லும் பயணிகள் பாட்டு பகலிற் கேட்கும். தெருவெல்லாம் நான்மறையுடன் நால்வர் திருமறை ஒலிக்கும்.

அந்தணர் தெருக்களில் ஆரியம் பயிலும். மற்றத் தெருக்களில் தமிழே முழங்கும்.

மறக்குலத்தேவர் மாளிகைகளில் காலை குஸ்தி, சிலம்பம், வாள் வீச்சு, போர்ப் பயிற்சிகள் நடக்கும். மாலையிற் புலவர் கூட்டம் நடக்கும். தில்லிபாட்சா, பெரியசாமித்தேவர், சிங்கத்தேவர், ஆவாரங்காட்டு துரை, குழந்தைத் தேவர் முதலியோர் தொல்காப்பியம், திருக்குறள், கம்பராமாயணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, புறநானூறு, அகநானூறு முதலிய தொல் இலக்கண இலக்கியங்களை ஆராய்வதுண்டு. இராமலிங்கம் பிள்ளை, கணபதியா பிள்ளை முதலிய பல புலவர்கள் அங்கே விளங்கினர்.

இதோ வருகிறுர் அந்தண் அறிஞர். செந்தமிழ்ச் செம்மல்—தெய்வசிகாமணிப் புலவர்—அழகிய திருவாளர்; நல்ல உயரம், நல்ல பருமன், நல்ல முகக்களை, பொன்னுர் மேனி, எளிய நடையுடை. இடுப்பு வேட்டியும், மேலாடையும் தூய வெண்மையானவை—புலவர் கூட்டம் போவதை நிறுத்தி, எழுந்து கும்பிட்டு அவரை வரவேற்றுப் பலகைபோட்டு அமர்த்தும். தெய்வசிகாமணியின் தங்கமணிக் குரல் அரைமணிநேரம் ஒலிக்கும்; அனைவர் உள்ளமும் மகிழும்.

தெய்வசிகாமணிப் புலவர் இராமலிங்க வள்ளலாருடன் இருந்து பழகியவர். அருட்பா ஐந்து திருமுறைகள் அவருக்குப் பாடம். திருவாவடுதுறை ஆதீனப் புலவர். மகாவித்துவான்

மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வேதநாயகர், தியாகராச செட்டியார், சுவாமிநாதையர், வேம்பத்தூர் பிச்சுவையர், ஆறுமுக நாவலர், பாஃச்கர சேதுபதி, தினகர சேதுபதி, பாண்டித்துரைத் தேவர், மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் அனைவரும் இவருடைய நண்பர். எந்தப் புலவர் நூலியற்றினாலும் இவரது சாற்றுக்கவிக்கு வருவ துண்டு. இத்தகைய புலவர் எனக்குத் தமிழாசிரியராக வாய்த்தது திருவருட் செயலாகும். தெய்வசிகாமணி சிவகங்கை அரசருக்கு ஆசிரியரானார். அத்துடன் அரசர் உயர்நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியரா யிருந்தார். இவரது பாடமுறையே தனிச் சிறப்புடையது. முதலில் கடவுள் வாழ்த்துக்கள் இருபது எழுதிப் போட்டுப் பாடம் பண்ணச் சொல்லுவார். பிறகு இனிய ஆழச் செய்யுட்களைச் சிறு கதைகளால், அருட்பெரியார் வரலாற்றுக் குறிப்புக்களால் விளக்கு வார். தமிழில் சுவையேற்றி, இலக்கணம் தொடங்குவார். இலக் கணமும் கதைப் போக்கில் இருக்கும். எளிதாக விளங்கும். அதன் பிறகு குறித்த பாடநூலை மாணவர் எளிதாகப் படித்து அறிந்துகொள்ளச் செய்வார்.

சிறு பருவத்தில் நான் மூன்றும் வகுப்புப் படித்தபோது ஆசிரியர் பிரம்படிக் கொடுங்கோல் நடத்தினார். நான் மொந்தை யுருத்தள்ளுவதில்லை. ஒருநாள் "சந்தன மென்குறடு தான் றேய்ந்த காலத்தும்" என்ற பாட்டு ஒப்பிக்க வேண்டியிருந்தது. நான்,

*"சந்தனக் கட்டை தனையறைத்துத் தேய்த்தாலும்*
*கந்தருமப் போதும் கமகமக்கும்—சொந்தத்*
*தனங்கெட்டுப் போயும் தருமமிகு நல்லார்*
*மனங்கெட்டுப் போகார் மதி"*

என்ற கருத்தைவைத்துப் பாடினேன். ஆசிரியர் கட்டைப் பிரம்பை எடுத்துவந்து "ஏகமகமா—போவெளியே—பாடம் செய்துகொண்டு வா" என்று அனுப்பிவிட்டார். நான் வெளியே சென்று ஒரு மாமரத்தடியில் அமர்ந்தேன். கிளிகள் கீச்சிட்டன—"கிளிகாள், மொந்தையுருப் போடாதென் சிந்தை மகிழப்பாடும் கல்விப் பய னெய்தாதோ" என்று இரங்கினேன். அப்போது ஒரு கிண்கிணிக் குரல் கேட்டது. அதோ எதிரே ஒன்பதாம் வகுப்பில் தெய்வசிகா மணி ஐயர் பாடம் சொல்லுகிறார்—நான் தாவிச் சென்று அடக்க மாக ஒரு மூலையில் அமர்ந்து கேட்டேன். "நாராய் நாராய் செங்கால் நாராய்" என்ற சத்திமுற்றப் புலவர் பாட்டை விளக்கிக் கதை சொன்னார். "கையது கொண்டு மெய்யது பொத்தி" என் பதை அப்படியே நடித்துக் காட்டினார். நானும் கையை அப்படி வைத்துக்கொண்டேன். அவர் விளக்க விளக்கப் பாட்டும்

எனக்குப் பாடமாயிற்று. மாணவரை ஒப்பிக்கச் சொன்னூர். ஒருவன் தடுமாறினுன். இல்லி அல்லி என்று—நான் எழுந்து "இல்லிதூர்த்த பொல்லா மார்பம்—சுவைத்தொறும் சுவைத் தொறும் பால்காணுமல்" என்று முழுதும் ஒப்பித்தேன். மாணவர் "ஐயா, ஐயா—"ஜேவிராம் தம்பி, தம்பி" என்று கூச்சலிட்டனர்—இதற்குள் மணியடித்தது. புலவர் என்னைத் தடவிக் கொடுத்து "தம்பி இங்கேன் வந்தாய், எந்த வகுப்பில் படிக்கிருய்" என்று அன்புடன் வினுவினர். "ஐயா என்னை மூன்ரும் வகுப்பில் சேர்த் தனர். மொந்தையுருப் போடாது கருத்து நிரம்பப் பாடினேன். ஆசிரியர் வெளியேற்றினர்; அதுவும் நன்மைக்கே. இங்கே தங்கள் இனிய தமிழைக் கேட்டேன். இனி நான் தங்களிடமே படிப்பேன்" என்றேன். அவர் அன்புடன் எதிரேயிருந்த சாமியார் மடத்திற்கு அழைத்துச் சென்ருர்—அங்கே தாயுமானுர் பராபரக் கண்ணி நடந் தது. நான் சாமியாரை வணங்கி "எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கவ்வுயிராய் அங்கங்கிருப்பது நீ அன்ரூே பராபரமே" என்று பராபரக்கண்ணி முழுதும் பாடினேன். என் தாயார் தாயுமானுர் பாடலைப் பாடிப்பாடிக் கேட்டுக் கேட்டு எனக்கும் பாட மானது. தெய்வசிகாமணிப் புலவருக்கு என்மேல் அன்பு மிகுந் தது. அவர் "எவ்வுயிரும் தன்னுயிர்போல் எண்ணி இரக்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே" என்பதை விளக்கி, "பால் நினைந்தூட்டும் தாயினும் இறைவன் பரிவுகொண்டு அன்பரைப் போற்றுகிருன். தாயின் அன்பு சேயிடம் பால் வடி வாகப் பாய்கிறது" என்றெல்லாம் இனிது விளக்கினர். நான் ஒரு காகிதத்தில்,

> "அருவாம் சிவனருளும் அன்னைமுலைப் பால்போல்
> உருவாகும் அன்பர் உளம்"

என்று எழுதி அவர் திருவடியில் வைத்து வணங்கினேன். "அட இந்தக் குறளடி யாரது" என்று வியந்து வினுவினர். "அருவுக்கும் உருவுக்கும் தெளிவாக விளக்கந் தந்த இச் சிறுவன் ஒரு ஞானி" என்று அனைவரிடமும் சொல்லி அன்னை முலைப்பால் உருவம்—தாயன்பு அருவம் என்று நயமுரைத்தார்.

அன்றுமுதல் நான் அவரை நிழல்போலத் தொடர்ந்தேன். அவர் முதலில் ஒரு குறள் பாடம் சொன்னூர்—எப்படி? அவருக்கு விருப்பமான இடம் ஊருக்குக் கிழக்கேயுள்ள தாமரைக் குளம். அதற்கு 'ஆத்தா ஊருணி' என்று பெயர். அங்கே என்னை இட்டுச் சென்ருர். அங்கே அழகான வெண்—செந்தாமரைகள் பூத்திருந்தன. "பார்த்தாயா அழகான தாமரை மலர்களை. அவை தாளுயர்ந்து அழகிய கிண்ணங்கள் போலக் காண்கின்றன.

வெய்யிற் காலம் தண்ணீர் வற்றும், அப்போது அவை நீரளவே தாழும். அதுபோலவே நம் உள்ளத்தின் உயர்வுக்கேற்றபடியே வாழ்வும் வளரும்'' இக் கருத்தைத் திருவள்ளுவர் சொல்லுகிறார் கேள் :

''வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு''

இந்தக் காட்சியும், குறளும், விளக்கமும் என் உள்ளத்தை உயர்த்தின. ''வெள்ளத்தளவே மலரும் — உள்ளத்தளவே அறிவும்' என்றேன். புலவர் மகிழ்ந்து எனக்குத் திருக்குறள் பாடம் சொன்னார். நான் ஆறு ஆண்டுகள் இவரிடம் இலக்கண இலக்கியங்களை முறையாகப் படித்துப் பெற்ற பயன் அளப்பரிதாகும்.

சிவகங்கையில் பெரியபுராணமும் கம்பராமாயணமும், வால்மீகி ராமாயணமும், எங்காவது நடக்கும். நான் சுவையான படலங்களைக் கையில் நூல் வைத்துக்கொண்டு கேட்பதுண்டு. இராமலிங்கம் பிள்ளை பெரியசாமித் தேவர் வீட்டில் பெரியபுராண விளக்கம் செய்தார். அவர் சைவசித்தாந்தம் கற்று நின்றவர்; அப்பரிடம் அளவற்ற அன்புடையார். தேவார திருவாசகங்களை மிக இனிதாகப் பாடுவார், ஆடுவார், நடிப்பார். அவர் படிப்பது நடிப்பது போலிருந்தது. எனக்கு இசைப்பயிற்சி யுண்டாதலால் சிலநாட்கள் என்னைக் கையேடு படிக்கச் சொல்லி அவர் விரிவுரை நிகழ்த்துவதுண்டு. அவரிடம் பெரியபுராணம் முழுதும் கேட்டேன். தெய்வசிகாமணிப் புலவர் கம்பராமாயணம் விளக்கினார்; கம்பனே விரிஉரைப்பது போலிருந்தது—பத்துப் புலவருடன் நானும் பாடல் கேட்டேன். கம்பக் கவிகளை நானே படித்தேன். அடிக்கடி புலவர் என்னைக் கம்பர் மண்டபத்திற்கு அழைத்துச்சென்று அங்கே இராமாயணம் படிக்கச் சொன்னார். சுந்தர காண்ட விளக்கம் என் உள்ளத்திற் பதிந்தது. கம்பனை அள்ளிப் பருகியது என் கவியார்வம். அம்மாதிரி ஆழக் கவியாகப் பாரத சக்தியை உருவாக்க அந்தக்காலமே சிந்தனை செய்தேன். அதே நடையில் அப்போது எழுதிய இராமாயணம் பாரதசக்தி சித்தி காண்டத்தில் உள்ளது. அதைப் புலவர் கேட்டுப் போற்றினார்.

நான் ஆயிரம் பாடல்கள் எழுதி இசைக்கடல் (சங்கீத சாகரம்) என்ற பெருநூல் கோத்து இரவில் அதை எனது தலையணையின் கீழே வைத்துப் படுப்பது வழக்கம். இந் நூலை என் மூத்த அண்ணா மெல்ல எடுத்து மாயம் செய்துவிட்டார். உலகியல்பை அறிந்து கவி எழுதியெழுதிக் கோவிலில் நடராசர் திருவடியில்

வைத்துக் கிழித்தெறிந்து வந்தேன்—அல்லது கரியினாலே சுவர் களில் எழுதிவந்தேன். இதை அன்புப் புலவர் குறிப்பாகப் பார்த்து வந்தார்.

உலகின் போக்கை அறிந்து துறந்தது மனம். ஒருநாள் குளக்கரை மண்டபத்தில் இப்படி எழுதினேன்:

“தெய்வ ஒளி தன்னையே தேடு; பிறவெல்லாம்
கைநழுவும் காலத்திற் காண்”

இதைத் தெய்வசிகாமணிப் புலவர் பார்த்துத் தட்டிக் கொடுத்து—“இதுபோன்று இன்னும் எழுதியிருக்கிறாயா? கொண் டா” என்றார். தெய்வ ஒளி என்பது தெய்வசிகாமணியின் அறி வொளி என்று பொருள் சொன்னேன்.

“எழுதிக் கிழித்தேனே எண்ணிறந்த பாடல்கள்” என்றேன். புலவர் “இனி எல்லாம் எழுதி என்னிடம் காட்டிச் சேர்த்து வை” என்றார். புலவர் எனக்கு யாப்பருங்கலமும் காரிகையும் தண்டி யலங்காரமும் கற்பித்து, என் கவிதைகளை அவ்வப்போது பார்த்து இஃது இப்படியிருத்தல் வேண்டும். கம்பனைப் பார், சிந்தாமணி யைப் பார், சேக்கிழாரைப் படி—என்று ஊக்கி வந்தார். அந்தக் காலம் நான் எழுதிய பாடல்கள் பல பாரத சத்தியில் இடம் பெற்றன—ஓயாது கவிதைகளை ஓதச் செய்தார் புலவர்.

புலவர் மதுரை செல்லும்போது என்னையும் அழைத்துச் செல்வதுண்டு. அங்கே நச்சினார்க்கினியர் சங்கப் புலவரைக் கண்டு பேசுவார். என்னையும் அறிமுகம் செய்து வைப்பார். ஒரு வெள்ளிக்கிழமை மீனாட்சியம்மனை வணங்கி நின்றோம்—அம்மன் அணியழகைப் பாடினேன்:

“காலை யழகோ கலையழகோ கண்குளிரும்
மாலை யழகோ மலையழகோ—வேலையிலே
ஆடும் அழகோ அருளன்னை என்னுள்ளே
பாடும் குயிலான பண்பு”

“மூலக் கனலே முதிய வுலகாளும்
காலக் கனலே கவிக்கனலே—ஆலழகன்
பாகத் தமர்ந்த பரம சிவக்கனலே
யோகத் தமர்வாயென் னுள்”

புலவர் “சுத்த சிவசக்தியருள் உனக்கு நிறைவாக உண்டு” என்று வாழ்த்தினர். தமிழ்ச் சங்கத்திலும், பொது நூலகங்களி லும் ஆயிரக்கணக்கான நூல்கள் நிரம்பிக்கிடக்கின்றன; படிப்பா

றில்லை. ஒருமுறை ஒரு நூலகத்தில் சிதள் பிடித்து நூறு அரிய நூல்கள் மண்ணுயின—மற்ருென்றில் தீப்பிடித்து நூல்கள் சாம்பலாயின—என் உள்ளத்தில் "ஏடுகள் எழுதியென்ன கூடுக இறைவனை"

"நினைத்து நினைத்து நினைப்பற்று நெஞ்சே
நினைப்பற்றி நீயாகி நில்"

என்ற கருத்தெழுந்தது—யார் யாரோ பாடச் சொல்லுவார்கள் பாடி, அப்படியே தந்து மறந்து வந்தேன்.

ஒருநாள் தெய்வசிகாமணிப் புலவர் ஆசிரியர் வேலையை விட்டார். ஆத்தாவூருணி அரசமரத்தடியில் அமர்ந்து ஞானவாசிட்டம் என்னைப் படிக்கச் சொல்லிக் கண்ணை மூடி அமர்ந்தார் மறுநாள் தமது தலைமாணவர் கணபதிப் புலவரை அழைத்து "கம்பராமாயணம் படி இவருடன்—அப்பா கணபதி நமது சுத்தானந்தத்தைக் கவனித்துக்கொள்" என்ருர். "சுத்தானந்தம்; என்னுள் பேசிய சக்தி உன்னுள் பாடும்—முன்செல்—இடர்களுக்கு அஞ்சாதே! வெற்றியுண்டு—வீறுகொள்" என்ருர். நான் கண்ணீர் ததும்ப அவர் காலைப் பிடித்துக்கொண்டு பாடினேன்—"காலைப் பிடிக்காதே—கருத்தைப்பிடி" என்ருர்.

"தெய்வ சிகாமணியே தீந்தமிழ்க் கற்பகமே
செய்யபழ நூல்சொன்ன தேன்வாயா—வையத்தில்
ஏடுபல நானும் எழுதிக் குவித்தது நீ
பாடுபா டென்ற பரிசு"

அடுத்தவாரம் அந்தோ—எனது அருமைப் புலவர்மணி தெப்பக்குளத்தில் மிதந்தார். அவர் தலையில் வெட்டுக்காயம் இருந்தது. என்ன நடந்ததோ தெரியாது! குளத்தைச் சுற்றிக் கூட்டம்—நாலைந்து பேர் நீந்திச் சென்று உடலைக் கரைசேர்த்தோம்—அவர் மாப்பிள்ளை கருமாதிகளை நடத்தினர். நான் பாமாலை சூட்டிப் பணிந்தேன்.

"கன்னித் தமிழமுதைக் கம்பர் சமாதியிலே
உன்னிப் புடனளித்த உத்தமனே—மின்னுடலம்
வெட்டுண் டிறந்தாயோ வித்தகனே என்னுளனை
இட்டுண்டு வாழ்ந்தா யினிது."

"அன்னையினும் தந்தையினும் அன்பு மிகுந்தவனே
என்னையா ளாக்கியனை நீஎம்மானே—பொன்னுனே
மின்னுடலை நீத்தாள் மிளிரன் பறிவுடனே
என்னுடலைப் பூண்பாய் இனி"

புலவர் இறுதி எனக்குத் துறவைக் கொடுத்தது. பட்டினத்தார் பாடலில் என் துறவுறுதியைத் தீட்டிச் சாணபிடித்தேன்.

கணபதியா பிள்ளையுடன் நான் தமிழ் இலக்கியங்களைப் படித்துப் படித்துப் பண்பட்டேன். முதன்மையாகக் கம்பராமாயணம் என்னைக் கவர்ந்தது. கம்பர் சமாதியிலிருந்து அதைப் படித்தபோது புதுப்புது நயங்கள் தோன்றும்.

ஒருநாள் காலைக் கதிரெழுச்சி முன் மனங் குவிந்திருந்தேன்—கம்பன் கவிதை எழுந்தது.

"மீனுடை எயிற்றுக் கங்குல்
கனகனை வெருண்டு வெய்ய
காலுடைக் கதிர்கள் என்னும்
ஆயிரம் கரங்கள் ஓச்சித்
தானுடை உதயம் என்னும்
தமனியத் தறி பிளந்து
மானுட மடங்கல் என்ன
வந்தனன் வயங்கு வெய்யோன்"

மானிடச் சிங்கம்போலக் கதிரவன் எழுந்த நயத்தை நினைத்து உருகினேன். கணபதிப்புலவரிடம் சொன்னேன். உடனே அவர் இரணியப் படலம் படிக்கச் சொல்லி விறுவிறுப்புடன் விளக்கினர். அன்றுதான் எனக்குப் பாரதசக்தி பாட எழுச்சி வந்தது. அங்கும் இங்கும் வந்த பாடலைக் குறித்துப் பிற்காலம் நூலில் தொகுத்தேன். எல்லாம் என்னை ஆளாக்கிய புலவர்மணி தெய்வசிகாமணி யோகியின் அருளே.

———

## பழந்தமிழ் நூற்சிறப்பு

"தமிழிலுள்ள பழைய நூல்"களெல்லாம் அருளொழுக்கத்தையும் ஒரே முழுமுதற் கடவுள் வணக்கத்தையும் அறிவுறுத்தி, உயிர்க்கொலை ஊனுணவு கட்குடி பல சிறு தெய்வ வணக்கம் பல சாதி வேற்றுமை முதலான தீய வொழுக்கங்களைக் கடிந்து விலக்குகின்றன. இத் தீய வினைகளைச் செய்யுமாறு ஏவிப் பொய்யும் புளுகும் புகலும் ஆரிய நூல்களைப் போல்வன தமிழில் ஒன்றுதானும் இல்லை.

— மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் அறிவுரைக்கோவை)

# நிலத்து அறைந்தான் கை

[பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன், பி.எஸ்சி., எம்.ஏ.,

தமிழ் வளர்ச்சி இயக்குநர், குறளகம், சென்னை ]

சினமானது கொண்டவனையே திருப்பித் தாக்கும் வகையில் இருவழிப் பாதையில் செல்லும் இயல்புடையது என்பதனை வற்புறுத்திக் காட்டுதற்கே வள்ளுவர் நிலத்தறைந்தான் கையினை உவமையாகத் தேர்ந்து,

*"சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு*
*நிலத்தறைந்தான் கைபிழையா தற்று"*

எனக் கூறுகிறார். இருந்தாலும் இன்றுவரை உரையாசிரியர் எவரும் 'நிலத்து அறைந்தான் கை' பெறுகின்ற அனுபவத்தைப் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை.

**தரை அடி தப்பாமல் விழும் :**

பரிமேலழகரும், 'சினத்தைத் தன் ஆற்றல் உணர்த்துவதொரு குணம் என்று தன்கட் கொண்டவன் அவ்வாற்றல் இழத்தலில் நிலத்தின்கண் அறைந்தவன் கை அந் நிலத்தை யுறுதல் தப்பாதவாறு போலத் தப்பாது' என்றே 'ஒருவழிப் பொருள்' கொண்டு சென்றுவிட்டார். ஏனையோர் உரைகளும் 'நிலத்தை அறைந்தவனது கை குறி தவருமல் நிலத்தினைச் சென்று தாக்குதல் எப்படி உறுதியோ, அதுபோன்று சினம் கொண்டவன் சினத்தால் அழிவதும் உறுதி' என்ற விளக்கத்தையே தந்து செல்கின்றன. குருடன் நிலத்தை அறைந்தாலுங்கூடக் 'கை அந் நிலத்தை யுறுதல் தப்பாது' என்பது வெளிப்படை. இதனைக் கூற வான்புகழ் வள்ளுவர் ஒருவர் வரவேண்டியதில்லை! அவ்வளவு ஏன்? மரத்திலிருந்தும், மாடத்திலிருந்தும், விண்ணிலிருந்தும் விடுபட்டு வீழும் பருப்பொருள்களெல்லாம் கூட 'நிலத்தை உறுதலினின்றும்' தப்பமாட்டா என்பதையும் உலகம் அறியும். இங்குச் சினத்தின் திருப்பித்தாக்கும் இயல்பினை, 'கை நிலத்தை உறுதல் தப்பாது' என்ற உரையாசிரியர்களின் விளக்கம் எவ்வகையில் வலியுறுத்துகின்றது என்பதைத்தான் நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை! தரை அடி தப்பாமல் தனக்கு விழும் என்ற இருவழிப் பாதைக் கருத்தன்றோ இங்கு வேண்டுவது! வள்ளுவரே சினத்தின் திருப்பித் தாக்கும் இந்த இயல்பினை,

*"தன்னைத்தான் காக்கின் சினம் காக்க காவாக்கால்*
*தன்னையே கொல்லும் சினம்"*

என்றும்,

*"சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்*
*ஏமப் புணையைச் சுடும்"*

என்றும் தெளிவாக விளக்கியிருக்கின்றார். எனவே, அவ் வியல் பினை வற்புறுத்த விரும்பும் வகையில் நிலத்து அறைந்தான் கையும் நிலத்தால் திருப்பித் தாக்கப்படும் என்ற ஓர் உண்மையினை உட்கொண்டே இக் குறளைக் கூறியிருத்தல் வேண்டும்.

**பிழைத்தலும் பிழைத்துக் கொள்ளுதலும்' :**

பிழைத்தல் என்ற சொல் 'தவறுதல்' என்ற பொருளில் மட்டும் வரும் என்று சொல்லிவிட முடியாது. தப்பித்துக் கொள் ளுதல் என்ற பொருளிலும் வரும்! இடத்திற்கேற்பப் பொருளைக் கொள்ளுதல் இன்றியமையாதது என்பதைச் சொல்ல வேண்டுவ தில்லை. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களும், (மனோன் மணீயம் அங்கம் 5 : களம் 3)

*"பிழைத்தீர் இம்முறை........*
*பிழைத்திலம் என்றும்"*

என மூன்றும் படைவீரனையும் முருகனையும் உரையாடவிட்டுப் 'பிழைத்தல்' என்ற சொல்லின் இருபொருள் நயத்தை எழிலுற எடுத்துக் காட்டுகிறார். ஆம், இம்முறை உயிர் பிழைத்துக் கொண் டீர்கள்என்ற மூன்றும் படைவீரனுக்கு மாற்றம் அளிக்கும் வகையில் என்றுமே நாங்கள் பிழை செய்ததில்லை என்று முருகன் பேசு கிறான் !

**செயலும் எதிர்விளைவும் :**

எனவே, நிலத்தறைந்தானது கை அச் செயலின் எதிர் விளைவிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது என்ற தத்துவத் தையே வள்ளுவர் உவமையாகத் தேர்ந்து ஆண்டுள்ளார். ஆம், நாம் கையால் நிலத்தை அறைந்தால் நிலமும் கையினை அதே ஆற்றலுடன் திருப்பி அறைகின்றதன்றோ? ஒவ்வொரு செய லுக்கும் நேரான எதிர் விளைவு உண்டு (For every action there is equal and opposite reaction) என்ற இந்தத் தத்துவத்தை நியூட்டன் கூறிய 'மூன்றும் இயக்க முறைமையை' வெகுண்டார்க்கு வரும் தீங்கு கூறவந்த வள்ளுவர் நியூட்டன் பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே உணர்ந்து ஆண்டிருக்கின்றார்.

**பரிசோதனையும் செய்பலாம் :**

'நிலத்தறைந்தான் கை பிழையா தற்று' என்பதை மேலும் புரிந்துகொள்ள வேண்டுமானால் (அருகிலே மருத்துவரை வைத் துக்கொண்டு) நிலத்தைக் கையால் அறைந்து பார்த்துப் புரிந்து கொள்ளலாம் !

வாழ்க வள்ளுவர் !

வளர்க குறள்நெறி !!

# வாழ்ந்த தமிழரும் வரலாற்று உணர்வும்

[புலவர் பொன். முனியப்பன்]

'தமிழில் என்ன இருக்கிறது?' என்று தருக்கித் திரிவது பெருமையாகக் கருதப்பட்ட காலம் ஒன்றிருந்தது. அக் காலத்தில் வரலாற்று உணர்வு என்பது தமிழர்க்கு அறவே கிடையாது எனவும் பழிக்கப்பட்டது. ஆயின், உண்மை நிலை நேர்மாறானது.

ஏனெனில், தமிழைப் பழித்தவர்கள்எல்லாம் தமிழில் என்ன உள்ளது என்பதைப் படித்தவரோ, பார்த்தவரோ அல்லர். படிக்காமல் போனாலும் தமிழில் உள்ள நூல்களையும், பல்வேறு துறைகள் பற்றிய பனுவல்களையும் அறிந்திருந்தால் கூடத் தமிழைக் குறை கூற எவருக்கும் நா எழாது.

இன்றைக்கும், தமிழ்நாட்டின் சிற்றூர்ப் புறங்களிலும், சில பேரூர்களிலுங் கூட ஒருவன் தவறு செய்யும் போது "உனக்குக் கொஞ்சமாவது 'அறிவு நினைவு' இருக்கிறதா?" எனக் கேட்கும் வழக்கம் உள்ளது. இச் சொற்றொடர் பழமொழியன்று. இது 'சொலவடை' அல்லது 'சொலவடம்' என நெல்லை மாவட்டத்தில் அழைக்கப்படுகிறது. இக் கூற்று ஒன்றே தமிழர் அறிவு நினைவோடு கூடிய வரலாற்று உணர்வினர் என்பதைக் காட்டும்.

'அப்படியாயின் தமிழர்தம் வரலாறுகள் எல்லாம் எங்கே?' என்ற வினா எழுதல் இயல்பே. எல்லாம் அழிந்துவிட்டன எனக் கூறப் போவதில்லை! என்றாலும், இக் கூற்று பிழையற்றது என்னும் உண்மையை முதலில் எல்லோரும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

வடபுலத்திலிருந்து இறக்குமதியான தொல்கதைகளையும், 'இப்படியெல்லாம் இருந்தது' என்னும் பொருள்தரும் இதிகாசங்களையும் கண்டவர்கள் பண்டைத் தமிழ் இலக்கியங்களையும் அவற்றை நோக்கிய கண்கொண்டே நோக்கினர். 'அரண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்பது போலத் தொல் தமிழ் இலக்கியங்களையும் கற்பனை என எண்ணிக் கருத்தழிந்தனர்.

எதனையும் இலக்கியச் சுவையோடும், எதுகை மோனை நயத்தோடும் சொல்வது தமிழர் இயல்பு. இன்றைக்குங் கூட

'வரலாறு—கிரலாறு,' 'எழுத்து—கிழுத்து', 'படிச்சுக்—கிடிச்சு', என எதையும் எதுகை நயம்படக் கூறுவது தமிழர்தம் குருதியில் கலந்த பண்பாகும். மேலும் பிறந்ததும் பிறக்கும் தாலாட்டு முதல், இறந்ததும் எழும் ஒப்பாரி (ஒப்புவரி) வரை இழுமெனும் ஓசைமிகு அமிழ்தத்தமிழ் இலக்கிய நயம் பெற்று வருவதை எவரும் உணரலாம்.

எனவே, தொல்தமிழ் இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள வரலாற்று நிகழ்ச்சிகள் யாவும், இலக்கிய நயம்படக் கூறப்பட்டிருக்குமேயன்றி அவை என்றைக்கும் கற்பனையாகா என்பதை உண்மையில் நாட்டமுள்ள ஒவ்வொருவரும் எளிதில் உணர்ந்து கொள்ளலாம்.

இதனை மெய்ப்பிக்க, இன்று, அறிவியல் துறை ஒவ்வொன்ருேடும் ஒப்பிட்டுத் திரு. பி. எல். சாமி அவர்கள் எழுதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ள நூல்களே தக்க சான்ருகும். கழகத் தமிழ் (சங்கத் தமிழ்) இலக்கியங்கள் எல்லாம் அறிவியல் நெறிப்படி வரலாற்றைக் கணிக்க முற்றிலுந் தகுதியுடையன என்பதை அவர்தம் நூல்கள் உரிய வண்ணம் நிறுவுகின்றன.

மேலும், பதிற்றுப்பத்து என்னும் பண்டைத் தமிழ் நூல் சேரர்தம் தூய வரலாறு கூறும் நூல். அதுமட்டுமன்று, அஃது ஓர் ஒப்பற்ற வரலாற்று இலக்கியமும் ஆகும். புறநானூற்ருேடு, பிற நூல்களும், அகத்திணை இலக்கியங்களும் பல வரலாற்றுச் செய்திகளைக் கொண்டுள்ளன என்பதைக் கற்ருேர் அறிவர்.

ஆகவே, தமிழ் முன்னேர் படைத்தளித்த வரலாற்றுக் கருவூலங்களையெல்லாம் இடைக்காலத்தில் பேணுமையாலும், பிற மயக்கில் வீழ்ந்து கற்பனைக் கரை கண்டு, கதை கூறித் திரிந்தமையாலும் விழுமிய பழம் பெருஞ் செல்வங்களையெல்லாம் இழக்க வேண்டியதாயிற்று. ஆயினும், இன்றைக்கும் அவை முற்றிலும் அழிந்துவிட்டனவெனக் கூறமுடியாது.

அரசுப் பழஞ்சுவடிக் காப்பகத்திலும், அன்று சரபோசியால் அமைக்கப்பட்ட சரசுவதிமகாலிலும் அவை ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கின்றன. அதனேடு, தமிழ்நாட்டின் பல்வேறிடங்களில் தனிப்பட்டோர் பலரின் இல்லங்களில் பானையிலும், பழம் பெட்டிகளிலும் பார்ப்போர் இன்றிப் பாழாய்க் கிடக்கின்றன. விழிப்பூட்டி அவற்றை வெளிக்கொணரப் படித்துப் பட்டம் பெற்ற பைந்தமிழ் இளைஞர்கள் இத்துறையில் பணியாற்ற எழுச்சி

கொள்ள வேண்டும். இதற்கு அரசு துணை நின்றால் இவ்வரும் பணி விரும்பிய பயனை யெல்லாம் விளைவிக்கும்.

தொல்பழம் வரலாற்றையே இதுவரை பார்த்தோம். இடைக் காலத் தொடக்கத்தில் ஓரிரு நூற்றாண்டுகளின் வரலாறுகள் என்ன என்பது இன்னும் தெளிவாகவில்லை. மறைந்திருக்கின்ற, அல்லது மறைக்கப்பட்டுக் கிடக்கின்ற வரலாறெல்லாம் வெளி யாகும்போது அவையும் புலப்படும். அதனை அடுத்த வரலாற் றைக் கூறுதற்கு ஏராளமான கல்வெட்டுக்களும், நடுகற்களும், ஏடுகளும் இருக்கின்றன.

உலகில் கல்வெட்டுக்களை மிகுதியாகப் பெற்றுள்ள நாடு நம் தமிழ்நாடே. அப்படியிருந்தும், அக் கல்வெட்டுக்களையெல்லாம் படியெடுத்துப் படித்து வரலாற்றைத் தெளிவாகப் படைத்துள் ளோமா ? ஆங்கிலேயர் படியெடுத்து வைத்துள்ள கல்வெட்டுக்களில் கூட, இன்னும் பாதிக்கு மேல் படிக்கப்படாமலும், பதிப்பிக்கப் படாமலும் உள்ளன.

இன்னும், படியெடுக்கப்படாமல் சுவரில் அமர்ந்து சுண் ணும்பு ஆடை அணிந்துகொண்டும், நெடுங்காலக் கொடுமை யினால் மழுங்கி மறைந்து கொண்டும், மண்ணுள் புதைந்து கொண்டும் இருக்கும் கல்வெட்டுக்களோ அளவில்லாது உள்ளன.

இவற்றை யெல்லாம் படைத்துக் கொடுத்துச் சென்ற நம் முன்னோர்களின் வரலாற்று உணர்விற்கும், அதைப் பேணாமல் வாழும் நம் உணர்விற்கும் எத்துணை வேறுபாடு உள்ளது ? இம்மட்டோ? கல்வெட்டுக்களோடும் கனிதமிழ் இலக்கியங்களோடும் போட்டியிட்டுக் கொண்டு வரலாற்றை நாட்ட வருகின்றன நடு கற்கள்.

'பீடும் பெயரும் எழுதி' எனப் பேசிய பழந்தமிழ் நூல்களில் பரவலாய்க் காணப்படும் நடுகற்களை இன்று தமிழகத் தொல்லியல் துறையும், கல்வெட்டு அறிஞர்களும், பிறரும் மறைவினின்றும், மண்ணினின்றும் வெளிக்கொணர்ந்து மாண்தமிழ் வரலாறு படைத்து வருகின்றனர்.

புறத்திணை இலக்கியங்கள், இலக்கணங்கள் புகன்ற திணை துறைகள் எல்லாம் கற்பனை என்று கதைத்துத் திரிந்தோர் கண் மூடி ஒதுங்குமாறு, அவையெல்லாம் வண்டமிழர் வாழ்வில் நிகழ்ந்த வரலாற்றிற்குரிய வளமான சான்றுகள் என்பதை இன்று நடு கற்கள் நாட்டி வருகின்றன.

கழகக்காலக் கல்வெட்டுக்கள் இப்போது ஒன்றிரண்டு அங்கங்கே தலைகாட்டத் தொடங்கியுள்ளன. (கூகலூர் வரலாற்றுப் பேரவையின் செயலாளனாகிய நானும், இப் பேரவை உறுப்பினர்களும் அண்மையில் கழகக் கால நடுகல் ஒன்றைக் கொங்கு நாட்டில் கண்டுபிடித்துள்ளோம்) கழகக் காலத்திலும், அதற்கு முன்பும் மிகுதியான நடுகற்கள் இருந்தன என்பதற்குத் தொல்காப்பியமும், பிற இலக்கியங்களும் பரவலான சான்றுகளைத் தருகின்றன.

இவற்றையெல்லாம் அகழ்ந்தாய்ந்து காணாத முயற்சிக் குறைவே குறையன்றி, நம் முன்னோரின் வரலாற்றுணர்வில் இம்மியும் குறை காண இடமில்லை. இன்றைக்கும், மன்னர்களின் வரலாற்றோடு மக்களின் வரலாற்றையும் காட்டும் இலக்கியங்களும் இன்ன பிற சான்றுகளும் இங்குள்ளதைப் போல வேறெங்கும் காண்பதற்கில்லை.

எனவே, தமிழ் முன்னோர் பெற்றிருந்த வரலாற்று உணர்வைத் தாமாய்ப் பெற்ற அறிஞர்களும், ஆர்வமிக்க இளைஞர்களும், இத் துறையில் ஈடுபட்டால், இப் பணிக்கு அரசு துணை நின்றால் வராத ஆறாய் இருக்கும் வரலாறு வரும் ஆறாகி, வந்து பயன் தரும்.

———

## கனவிலுங் கைகூடுமோ !

நகைக்குந் துணிக்கும் வீணான வெளிமினுக்குகளுக்கும் வெற்றாரவாரங்களுக்கும் இத் தமிழ்நாட்டிற் கணக்கின்றிச் செலவாகும் பொருளையுங், கல்விக்குங் கைத்தொழிலுக்கும் புதிய புதிய ஆராய்ச்சிகளுக்குஞ் சமய அறிவு வளர்ச்சிக்கும் மேனாட்டிற் பயன்படுத்தப்படும் அளவற்ற பொருளையும் ஒப்பிட்டு எண்ணிப் பார்க்குங்கால் இந் நாட்டவர் மேல் நாட்டவரோ டொப்ப நாகரிக இன்ப அறிவு வாழ்க்கையைப் பெறுதல் கனவிலும் கைகூடுமோ என்று வருந்தி ஏங்கவேண்டியதாயிருக்கின்றது !

—மறைமலையடிகளார்,
(அறிவுரைக் கோவை, பக். 150)

# அண்ணுமலைக் கவிராயர் தனிப் பாடலுரை

[டாக்டர், ந. சேதுரகுநாதன்]

இசைப்புழி இசைந்து இசைநலமும், பிரிப்புழிப் பிரிந்து பொருணலமுந் தந்து விளங்குகின்ற தமிழ்மொழியின் ஆற்றலும் நயமும் எந் நாட்டவராலும் எம் மொழியினராலும் எக் காலத்தும் அளவிட்டு அறிய இயலாதனவாகவே இலங்குகின்றன. மொழியின் ஆற்றலால் அதற்கு அந்த வன்மை வந்ததோ அல்லது புலவரின் ஆற்றலால் மொழி அந்த வன்மையைப் பெற்றதோ என்று ஆராய்ந்து பார்த்தால் அந்த ஆராய்ச்சி காலங்கடந்து போய்க்கொண்டேதான் இருக்கும். ''என்றுமுள தென்றமிழ்'' என்பது புனைந்துரையன்று. உரைத்தல் என்ற ஒருபொருள் குறித்து ஆராய்ந்தேன். அப் பொருளில் முப்பத்தையாயிரம் சொற்க ளுக்குமேல் இருக்கின்றன. அவை ஒருபொருள் குறித்த பலசொல். உரைத்தல் என்பது பற்றி முப்பத்தையாயிரத்துக்கு மேற்பட்ட சொற்கள் இருக்கின்றன என்ருல் அச் சொற்கள் சொல்லாக்கக் குழுவினரால் அங்ஙனம் பெருக்கமாக ஆக்கப்பட்டனவோ என்று நினைக்கவும் தோன்றலாம்.

சொற்கள் எத்துணைக் காலமாகவோ தாமாகவே தோன்றி மக்கள் வழக்கில் வளர்ந்து வந்துள்ளன. அது கருதித்தான் தமிழ் தொன்றுதொட்டு உள்ள மொழி, என்றும் 'எல்லையறு பரம் பொருள் முன் இருந்தபடி இருப்பதுபோல்' இருக்கின்ற மொழி. இறைவனும் உயிரும் உலகும் எங்ஙனம் முந்திய முதலனவாக (அநாதியாக) இலங்குகின்றனவோ அவை போல் முந்திய முதல் மொழியாய் என்றுமுள தென்றமிழ் என்று கம்பர் கூறவும், எல்லையறு பரம்பொருள்போல் என்று மனோன்மணீய ஆசிரியர் கூறவும், ''திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே'' என்று அவரே வியக்கவும் இலங்குகின்றது நம் அருமைத் தமிழ்மொழி. இதனை யான். எனது தாய்மொழி என்பதற்காக இங்ஙனம் கூறவில்லை. தமிழ் முப்பத்தையாயிரம் வகையாகப் பேச வன்மை வாய்ந்த மக்களின் மொழி. சுவை வகையாலும் ஆற்றலாலும் அங்ஙனம் பெருவன்மை பெற்ற தமிழ் மொழியை ஒருவன் கற்றுவிட்டேன் என்று சொல்வானே யானுல் அது நகைப்புக்கு இடம் தருவதேயாகும். ''கடல் குடித்த குடமுனியுன் கரைகாணக் குருநாடில், தொடுகடலை யுனக்குவமை

சொல்லுவதும் புகழாமே'' என்பது மனோன்மணீயம். கடலினைத் தமிழ்க்கு உவமை சொல்லலாகாது என்பது சுந்தரம் பிள்ளையவர்கள் கருத்து. ''தமிழெனும் அளப்பரும் சலதி'' என்றார் கம்பர். அளக்க முடியாத கடல் என்பதனால் கடல் தமிழுக்கு உவமையாகாது என்பதுவும் விளங்கும். முதுமொழியாகிய தமிழ்மொழியை, ''அநாதி மொழி'' என்று கூறுவது உண்மைதான். அந்த மொழியை வியந்து கூறியது அன்று என்றார், சுந்தரனார். மேலும் ''முதுமொழி நீ அநாதியென மொழிகுவதும் வியப்பாமே'' என்கின்றார். ஏனையா இவ்வளவு புகழ்ச்சி என்று நினைக்கத் தோன்றவில்லையா? தோன்றத்தான் செய்யும்.

சிலர் தமிழ்மொழியை ஒரு குடுக்கைக்குள் போட்டுக் குடுகுடுப்பை அடித்துக் கொண்டிருந்தால் போதும் என்றே கூறுகின்றார்கள். எளிய நடை வலிய நடை என்றெல்லாம் பேசுவார்கள். எளிய நடை வேண்டாமென்று யாவர் கூறினர்? ஒவ்வொருவர் தரத்துக்கும் ஒவ்வொரு வகுப்பிற்கும் தக்க நடையும் செறிவும் நுட்பமும் இல்லாவிட்டால் தமிழ்நூல்கள் ஒன்பதாம் வகுப்பிற்கு மேல் பாடம் வைப்பதற்கோ அறிஞர்கள் படிப்பதற்கோ தகுதியற்றன என்று கூறி ஒதுக்கவும் பின்வாங்க மாட்டார்கள்.

கம்பர் இவர்கள் கூறும் நடையில் நூல் செய்திருந்தால் அஃது எந்தக் காலத்திலேயோ போயிருக்கும். திருவள்ளுவர் நூலை இவர்கள் கூறும் நடையில் யாத்திருந்தால் அஃது இவ்வளவு காலமும் உயிர் வைத்துக் கொண்டிருந்திராது. முத்தொள்ளாயிரத்தை அங்ஙனம் எழுதியிருந்தால் அதற்கு உயிரே இராது. இவற்றையெல்லாம் நோக்காமல் தமிழின் ஆற்றலை மக்கள் பெறவிடாமலும் தாழும் பெருமலும் அழிக்கின்ற அழிவுநிலை உயர்ந்துகொண்டுதான் போகின்றது. அண்ணாமலைக் கவிராயர் எளிய நடை எழுதுவதிலும் அரிய நடை எழுதுவதிலும் எவரும் தம்மை அணுக முடியாத அண்ணா மலையாகவே இலங்குகின்றார்! அவர் இயற்றிய நூல்களைப் படித்த காரணத்தினாலேயே பாரதி வீரபாரதியாக வீரநடை போட்டுப் பெருமிதத் தமிழ்ப்பாட்டுப் பாட முடிந்தது.

சொல்லணி வகையில் எழுந்த திரிபு மடக்கு முதலிய பாடல்களை இயற்றிய முன்னோர்கள் அவற்றைச் சிறந்த கவி என்ற நோக்குடன் எழுதவில்லை. சொற்களைப் பிரிக்கவும் இசைக்கவும் சொற்பொருள் ஆற்றலை உணரவும் வழிவகை தோன்றும் வண்ணமாக விளையாட்டாகவே பாடினார்கள். அருணகிரி நாதர், அண்ணாமலைக் கவிராயர், திரிகூடராசப்பக் கவிராயர், சிவஞான முனிவர், சிவப்பிரகாச முனிவர், சின்னத்தம்பிப் புலவர், தலைமலைகண்டதேவர் முதலிய பெரியோர்களின் நூல்களைப் படித்து உணர்ந்தவர்

களுக்குச் சொல்லின் திறனும் பொருளின் நயமும் ஆற்றலும் உண்டாகும். அந்த ஆற்றல் ஏனைய நூல்களைக் கற்றற்கும் துணையாகும். இவற்றைத் தாம் உணராமலும் உலகினை உணரவிடாமலும் இவற்றை மறுப்பதே தொழிலாகக் கொண்டவர்களுக்குத் தமிழின் போக்கும் பாடல்களின் ஒலி நயமும் இசை நயமும் தெரிவதில்லை. போலியாகவே போய்விடுகின்றனர்கள். வெறும் வாய்ப்பறை அறைவதில் பயன்தான் யாதோ? அது நிற்க.

இனி ஆற்றல் தரும் அண்ணுமலையாரின் தனிப்பாடலை நோக்குவோம்.

**வண்டமரம் பனந்தாரா வினிலுரைக்க மதிதகிக்க வரவே வீழும்**
**வண்டமரம் பனந்தாரா வுலவுதடத் தெடுத்துவந்தான் வந்தா னேவி**
**வண்டமரம் பனந்தாரா னாடுவர்செய் யக்குழந்தை வருந்தினுள்சேர்**
**வண்டமரம் பனந்தாரா னென்னுமித யாலயபூ மன்ன ரேறே.**

(பொருள்) வண்தமர் அம்பல் - வண்மையையுடைய சுற்றத்தார் முணுமுணுத்து மறைவாகப் பேசுகின்ற பழிச் சொல்லை, ராவினில் - இரவில், உரைக்க-பேச, மதி - நிலவு, தகிக்க வரவே - வெப்பம் உண்டாக்கும் படியாக ஒளிவீசிக் கொண்டு வரவே, வீழும் வண்டு - வளையல்கள் விழுகின்றன, அமர் அம்பு - (பெண்கள்மேல் எய்து) போர் செய்வதற்கு உரிய மலர் அம்புகளை, அனம் - அன்னப் பறவையும், தாரா - தாரா என்னும் பறவையும், உலவு - நீந்தி உலாவுகின்ற, தடத்து - நீர்த் தடாகத்தில், எடுத்து - கொய்து கொண்டு, உவந்தான் - உவந்து, வந்தான் - வந்தவனாகிய மன்மதன், ஏவி - மலர்க் கணைகளை எய்து, வண் - மிகுதியாக, தமரம் - ஒலிக்கின்ற ஒலியையுடைய, பனந்தாரான் - பனம்பூ மாலையை அணிந்த சேரனை, (சேரன் - சேர்தலைச் செய்கின்ற தலைவன் என்ற பொருளில் அமைந்துளது) நாடுவர் செய்ய - மகளிர் விரும்புபவராகச் செய்ய, குழந்தை - பெண், வாடினள் - வாட்டமடைந்தாள், சேர் - நீ அவளைச் சேர்வாயாக, வண்டு - வண்டுகள், அமர் - பொருந்திய, அம் பனந்தாரான் - அழகிய சேர மன்னன், என்னும் - என்று சொல்லத் தக்க, இதயாலய - இருதயாலயன் என்னும் பெயருள்ள அரசனே, மன்னர் ஏறே - அரசருள் அரியேறு போன்றவனே என்பது பொருள்.

(பொழிப்புரை) வண்மையுள்ள செல்வராகிய உறவினர் அம்பல் என்ற பெயருள்ள மறைவாகக் கூறும் பழிச்சொல்லை இரவில் பேச நிலாவும் தோன்றி உடலை வெப்புறுத்தும்படியாக வர, வளையல்களும் கழன்றுவிழப், போர் செய்தற்கு உரிய மலர் அம்புகளை அன்னமும் தாராவும் உலாவுகின்ற நீர்த் தடாகத்திலிருந்து

கொய்து எடுத்துக்கொண்டு மகிழ்ந்து வந்தவனுகிய மன்மதன் மிகுதியாகச் சலசலவென்று ஒலிக்கின்ற ஓலையையுடைய பனைமாலை யணிந்த சேரன் என்ற பெயர்ப் பொருள் உள்ள தலைவனை மகளிர் நாடும்படி செய்யப் பருவநிலையடைந்த பெண் குழந்தை வாடினுள், நீ அவளைச் சேர்வாயாக. வண்டு பொருந்திய அழகிய பனம் பூ மாலையணிந்த சேரவேந்தன் என்று சொல்லத்தக்க இருதயாலய மருதப்பனே அரசர்க்குள் அரியேறு போன்றவனே, (எ - று.)

சேரன் - தலைவன். மன்மதன் மலர்க்கணை ஏவி மகளிருள் ஒவ்வொருத்தியும் தன் தலைவனை நாடும்படி செய்தான். சேரனை நாடும்படி செய்ததனுல் நீ சேர் - நீ சேரன் என்று சொல்லத்தக்க மன்னவன் என்பது நயம்.

(1) வண் + தமர் + அம்பல் + நந்தா + ராவினில் என்று பிரிக்க.

(2) (வீழும்) + வண்டு + அமர் + அம்பு + அனம் + தாரா.

(3) வண் + தமரம் + பனந்தாரான்.

சேரன் - தலைவன் என்ற பொருள்மட்டும் தந்தது.

(4) வண்டு + அமர் + அம் + பனந்தாரான்.

சொல்லின் செல்வமும் தமிழின் மரபு முறைமையோடு கூடிய பொருளின் செல்வமும் அமைந்த பாடல். அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

'வண்டமரம் பனந்தாரா' என்ற பதினேரெழுத்து உள்ள தொடரை நான்கு முறை மடக்கிப் பொருள் நயம் வரும்படி பாடச் சொல்லிக் கேட்கப் பாடிய பாடல். இத்தகைய பாடல்களைப் பிரித்துப் படித்துப் பொருளுணரும் வன்மை பெறுவது தமிழில் வன்மைபெறுவதற்கு வழியாகும்.

இது சொல்லணியில் மடக்கு என்ற அணியாகும். இத்தகைய பாடல்களில் நூறு பாடல்வரை பிரித்துப் படித்துணர்ந்தவர்க்கு இலக்கணக் கல்வியும் எளிதில் வரும். ஆனுல், இதனைக் கவிதைச் சுவையுடைய கவிதையென்று கருதிச் செய்யாவிட்டாலும் கவிதைக்கு உரிய பரிவும் சுவையும் ஓரளவு அமைந்துள்ளமையும் காண்க. தமிழ் முழுதுணர்ந்த பேரறிவு இன்றேல் இத்தகைய பாடல் இயற்ற இயலாது என்பதுவும் உணர்க.

இப் பாடல் புணர்வு குறித்துக் கூறப்பெற்றதாதலின், 'புணர்தல் நறுங்குறிஞ்சி' என்பவாகலின், குறிஞ்சிநிலத்துத் தலைவ

னாகிய சேரன் பெயரை ஈங்குப் புணர்தற்கு உரிய தலைவனாகக் குறித்துச் சேரன் என்ற பொருள் பயப்பப் பனந்தாரான் என்று குறிப்பிட்ட முறைமையும் காண்க. அடுத்த பாடலில் முல்லைநிலத் தலைவனைப் பற்றிப் பேசுகின்றாராதலின் வித்தார **மாலே** என்கின்ற நயமும் உணர்க.

நந்தா - நந்தாது, பெருக்காது; ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். ராவினில் - இரவினில்.

அம்பல் உரைப்பதுவும் நிலா வெப்புறுத்துவதும் மன்மதன் மலர்க்கணை எய்யப்பெற்று வாடுவதும் ஆகிய அவலந் தோன்றக் 'குழந்தை வாடினாள் சேர்' என்பது காண்க. அனம் - அன்னம் என்பதன் இடைக்குறை.

குறிப்பு: நிலவுகண்டழுங்கிய தலைவியின் துன்பம் தலைவனுக்குத் தோழி கூறுதல்.

வீரப்புலமையை அடக்கி வைத்த மடக்கு இது.

---

## எறிபடை நல்லூர்

தமிழகத்தில் அருவியூர், ஐந்நூற்றுவ மங்கலம், மணிக்கிராமம், எறிவீரபட்டணம் போன்ற புகழ்வாய்ந்த வணிகப் பெருநகரங்கள் இருந்தன. அத்தகைய வணிகப் பெருநகரங்களிலொன்று எறிபடை நல்லூர். எறிபடை நல்லூரைப் பற்றிச் சிவபுரி, பிரான்மலைக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

முகவை வட்டம், திருப்பத்தூர் வட்டம், செட்டிக் குறிச்சி எறிபடை நல்லூராக இருந்திருக்கலாம் என்று அங்குள்ள பாழடைந்த சிவன் கோவிலிலுள்ள பழுதடைந்த கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. எறிபடை நல்லூர் மணிய நாகநாட்டுச் செட்டி ஒருவர் முருகப் பெருமான் வழிபாட்டிற்குக் குன்றத்தூர் பற்றில் நிலம் வழங்கியதை அக் கல்வெட்டு குறிக்கிறது. எழுத்தமைதியைக் கொண்டு இக் கல்வெட்டு கி. பி. 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

சி. இலக்குமணன்,

தமிழாசிரியர், சிங்கப்பூர்.

# ஆராய்ச்சிக்கு உதவும் அரிய நூலகம்*

[திரு. ந. க. மங்கள முருகேசன்]

நூலகங்கள் அறிவுப் பயிர் விளைவிக்கும் நல் விளைநிலங்கள். அவை பயன் விளைவிக்கும் பல கனிகளை ஈன்றுதரும் நல்ல மரங்கள் என்றுகூடச் சொல்லலாம். நூலகம் என்று சொன்ன உடனேயே ஒருவர் நினைவுக்கு வரக்கூடியவை கன்னிமரா நூல் நிலையம், பல்கலைக் கழக நூலகம் முதலான சில பெரிய நூலகங் களே. அவைமட்டும்தான் அறிவு ஒளி அளித்து வருகின்றனவா? —ஆராய்ச்சியாளனுக்கு, அறிவுப்பசி கொண்டு திரிவோர்க்கு விருந்து படைக்கின்றனவா ? இன்னும் சில அரிய நூலகங்கள் சிலர் கண்களில் படாவிடினும் சீரிய நூல்கள் பல கொண்டு திகழ் கின்றன.

சென்னையிலுள்ள நூலகங்களில் குறிப்பிடத் தகுந்தவை சென்னை இலக்கியச் சங்க நூலகம், கன்னிமரா நூலகம், சென்னை மகாஜனசபை நூலகம், மறைமலையடிகள் நூலகம், இரானடே நூலகம், மாவட்ட மைய நூலகம், பெரியார் பகுத்தறிவு நூலகம் முதலானவை. இவற்றில் இலக்கியச் சங்கம், கன்னிமரா நூலகம் குறித்துப் பலரும் கேட்டு அறிந்திருக்கக்கூடும். பலருடைய பார்வையில் படாத—பல உயர்ந்த படைப்புக்களை உடைய— ஆராய்ச்சியாளருக்கு உதவுகின்ற சில நூலகங்களை அறிமுகம் செய்தல் வேண்டும்.

சென்னையில் இலிங்கிச் செட்டித் தெருவின் வடக்கு முனை வரை சென்றால் அங்குள்ள அரிய நூலகம் ஒன்றை அமைதியான சூழ்நிலையில் காணலாம். சமீப காலத்தில் தோன்றிய நூலகம் தான் என்றாலும் நூல்களின் கருவூலம் என்று இதனைக் கூறலாம். வெள்ளையாடை உடுத்தி அன்புநெறி போதித்த, அருள்நெறி போதித்த வள்ளல் இராமலிங்கர் முதன் முதலில் சொற்பொழி வாற்றிய இடத்தில் இந்த நூலகம் மறைமலையடிகள் பெயரால் அமைந்துள்ளது. அவருடைய பெயரில் இயங்கி வரும் நூலகம் ஆராய்ச்சியாளர்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதம். மறைமலையடி களே தாமே சேகரித்து வைத்திருந்த 5000 நூல்கள் இங்கே அழ குறத்தக்க முறையில் அடுக்கிவைக்கப்பெற்றுள்ளன. பேராசிரியர்

---

* சென்னை வானொலியில் 16—7—78 அன்று ஒலிபரப்பாயது.

அரங்காச்சாரி தம் வாழ்வில் சேர்த்த நூற்செல்வங்களையும் இந் நூலகத்திற்கு அளித்துள்ளார். ஆக 20,000 நூல்களுக்குமேல் இங்கே உள்ளன. தமிழ்ப்பண்பாடு, தமிழ் இலக்கியம், தமிழ்க் கலை ஆராய்ச்சிக்கு இவை பெரிதும் உதவக்கூடியவை என்றால் அது மிகையாகாது. திருக்குறளைப் பற்றி மட்டும் 600 நூல்கள் தமிழ், ஆங்கிலம், சீனம், தெலுங்கு என்று பல மொழிகளில் உள்ளன. ஜி. யு. போப்பின் தொகுப்புக்களையும் இங்கே காண்கிறோம். அதுமட்டுமல்லாது தமிழ் அறிஞர்களின் 300க்கு மேற்பட்ட கடிதங்களையும் இந் நூலகத்தில் தொகுத்து வைத்திருக்கிறார்கள்.

இதுமட்டும்தானா? விடுதலைக்குமுன் வெளியான நாளிதழ்கள், வார இதழ்கள், திங்களிதழ்கள் அத்தனையும் இங்கே காண்கிறோம். ஆராய்ச்சியாளன் எங்குத் தேடினாலும் கிடைத்திடாத 1920, 1922 ஆம் ஆண்டுகளில் வெளியான திரு. வி. க. வின் நவசக்தி, டாக்டர் வரதராஜுலுவின் தமிழ்நாடு, பெரியார் ஈ. வெ. இராமசாமியின் விடுதலை, குடியரசு முதலான பழைய பழைய ஏடுகள் பாதுகாக்கப் பெற்று ஆராய்ச்சியாளரின் பார்வைக்கு வழங்கப் பெறுகின்றன. தமிழகத்தின் விடுதலைப் போராட்ட வரலாற்றினை இந்த ஏடுகளை விரித்தாலே நம் கண்முன் அவை விரியும். இவை அரிய பொக்கிஷங்கள், ஆராய்ச்சிக் கருவூலங்கள். இவை வரலாறு கூறுகின்றன; வழிகாட்டுகின்றன. ஆராய்ச்சிக்கு என்றே சொல்ல வேண்டும். தமிழகத்தில் வெளிவந்த இருபதாம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியைச் சேர்ந்த வாரப் பத்திரிகைகள் பலவற்றையும் பாதுகாத்து வைத்துள்ளனர். இவற்றைக் கன்னிமாரா நூலகத்திலுங் கூடப் பெறமுடியாது. திங்கள் தவிர்த்த மற்றைய நாட்களில் இந் நூலகத்தினர் செயல்படும் ஆராய்ச்சியாளர்களுக்கு மட்டும் தக்க வசதிகளை யளித்து ஆராய்ச்சி மேற்கொள்ள உதவுகின்றனர். இங்கு வந்து அமர்ந்து ஆராய்ச்சி செய்வோர்க்கு இலவசமாகவே இத்தனை வசதிகளும் கிடைப்பது பெருமைக்குரிய ஒன்று. பழைய ஏடுகளை ஆராய்ச்சியாளர்களுக்கு மட்டுமே வழங்குகின்றனர். மற்றையவர்கள் அங்கேயே அமர்ந்து பிற தமிழ்ச் செல்வங்களை அனுபவிக்கலாம்.

———

### உண்மைப் பல்கலைக் கழகம்

இக்காலத்தில் உண்மைப் பல்கலைக் கழகம், நூல்களின் தொகுதிதான்.

—கார்லைல்

# இறைவன்மீது வஞ்சப் புகழ்ச்சி

**[சிவசத்தி]**

[வெண்பா, வஞ்சப் புகழ்ச்சி, சிலேடை முதலிய பழைய மரபுக் கவிதை அருகிவிட்ட இந்த மறுமலர்ச்சிக் காலத்தில் பழமைக்கு உயிரூட்ட வந்த கவிதைகள்.]

1. நான்சுழன்று வாடும் நரகத்துயர் கோடி
ஏன்தானோ உன்னை இயக்கவில்லை ?—ஊன்கசிந்து
உள்ளம் உருகி உயர்திணையும் அஃறிணையும்
கல்லும் கரையும் கனிந்து!

2. முற்பிறப்பில் நான்செய்த மோசங்கள் அத்தனைக்கும்
இப்பிறப்பில் என்னைப் பழிவாங்கி—அப்பனே
நீதிநிலை நாட்டும் நேரத்தில் காட்டாயோ
கோதில் கருணையைச் சற்று ?

3. தந்தை கொலைக்குத் தனயனைத் தூக்கிலே
எந்த வழக்கிலே ஏற்றுவார்?—இந்தச்
சிறுநீதி கூடத் தெரியாமல் என்னை
ஒருவழியாய்த் தீர்த்துவிட்டா யே!

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## முதியோர் கல்வித் திட்டம்

காந்தியடிகளின் 109 ஆவது பிறந்தநாளை யொட்டி 2-10-78இல் புது தில்லியில் நடைபெற்ற விழாவொன்றில் துணைக் குடியரசுத் தலைவர் மாண்பமை பி. டி. ஜாட்டி அவர்கள் தேசிய முதியோர் கல்வித் திட்டத்தினைத் துவக்கி வைத்தார். நடுவண் அரசின் கல்வி அமைச்சர் பி. சி. சுந்தர் விழாவிற்குத் தலைமை தாங்கினார். இத் திட்டம் பற்றிக் குடியரசுத் தலைவர் சஞ்சீவிரெட்டி அவர்கள் நாட்டு மக்களுக்கு விடுத்துள்ள செய்தியில், பொதுமக்கள் அனைவரும் இத் திட்டம் வெற்றிபெறத் துணைபுரிய வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். தலைமை அமைச்சர் மொரார்ஜி தேசாய் அவர்கள், அறியாமையைப் போக்குவதும், முதியோர் கல்வித் திட்டமும், மகளிர் கல்விக்கு முதன்மை அளிப்பதும் காந்தியடிகளின் எண்ணத்தை யொட்டி உருவாக்கப்பட்டவை என்று குறிப்பிட்டார். நடுவண் அரசின் கல்வி அமைச்சர் முதியோர் கல்வித் திட்டத்தைச் செயல் படுத்துவதில் மாணவர்களும், ஆசிரியர்களும் முக்கிய பங்கெடுத்துக் கொள்ள வேண்டும் என்றார்.

இம் முதியோர் கல்வித் திட்டம் கல்வி என்பது இன்னதென்றே அறியாத எழுத்தறிவற்ற 15 முதல் 35 அகவை வரையுள்ள 10 கோடிப் பேருக்கு முதலில் பயன்படும்படி செய்வதை நோக்கமாகக் கொண்டதாகும். இதில் பெரும்பாலோ பெண்களாவர்.

# தேசிய முதியோர் கல்வித் திட்டம்
# (2-10-78)




தேசிய முதியோர் கல்வித் திட்டத்தையொட்டிச் சென்னை இராசாசி மண்டபத்தில் நடைபெற்ற கூட்டத்தில் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் உரையாற்றுதல்

(டாக்டர் மால்கம் ஆதிசேஷையா அவர்களும், டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியம் அவர்களும் உடனிருத்தலைக் காணலாம்.)

இத் திட்டத்தை நாடெங்கும் பரப்ப வானொலியும் தொலைக் காட்சியும் முனைந்து செயல்படும். இவையேயன்றி மாநிலங்களில் விழாக்கள், கண்காட்சிகள், கருத்தரங்குகள் மூலமும் இப் பணி நடைபெறும். குமுகாயத்தில் கல்வி நிலையங்கள், பண்பாட்டு நிறுவனங்கள், மன்றங்கள், இளைஞர் கழகங்கள் ஆகியனவும் முதியோர் கல்வித்திட்டத்தைச் செயல்படுத்த முன்வர வேண்டுமெனத் தமிழக ஆளுநர் கேட்டுக் கொண்டுள்ளார்.

## வள்ளலார் - காந்தியடிகள் விழா

இராமலிங்கர் பணிமன்றத்தின் சார்பில் வழக்கம் போல் இவ்வாண்டும் வள்ளலார் - காந்தியடிகள் விழா 1—10—78 முதல் 8—10—78ஆம் நாள்முடியச் சென்னை மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில் சிறப்புற நடைபெற்றது. முதல்நாள் உயர்திரு. பெ. தூரன் அவர்கள் தலைமையில் மாண்புமிகு மா. பொ. சிவஞானம் அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார்கள்.

நாள்தோறும் கலை இலக்கியம் அருளியல் ஆகியவற்றில் தேர்ந்த அறிஞர்கள் உரையாற்றினர். பாட்டரங்கம், இசை நிகழ்ச்சி முதலியனவும் நடைபெற்றன. கீதாபோதகர் திரு. கிரிதாரி பிரசாத் அவர்கள் ஒவ்வொருநாள் காலையில் காந்தீய நோக்கில் கீதை விளக்கப் பேருரை நிகழ்த்தினர்.

7—10—78 விழாவில் செட்டிநாட்டரசர் அரசவயவர் முத்தைய செட்டியார் அவர்கள் சிறப்புரையாற்றினுர்கள். அவர்தம்உரையில் கழகஆட்சியாளர் தாமரைச்செல்வர் அவர்களின் நற்பணிகளைப் பாராட்டியது குறிப்பிடத்தக்கது.

எலும்பு மருத்துவர் எம். சி. இராசமாணிக்கம் அவர்கள் வள்ளலார் அருளிய "மரணமிலாப் பெருவாழ்வு" என்னும் பொருள்பற்றித் தாம் பெற்ற மருத்துவத்துறைக் கற்றறிவு, பட்டறிவு ஆராய்ச்சி நோக்கில் மிகச் சிறப்பாக உரையாற்றியது பாராட்டுதற்குரியது. இம் முறையில் மருத்துவர்கள், பொறியாளர்கள் முதலியோர் தமிழ் நூல்களை நன்கு ஆராய்ந்தால் தமிழின் தனிச் சிறப்பு நன்கு வெளிப்படும்.

8—10—78 இல் பொதுமைநெறி (சன்மார்க்க) மாநில மாநாடு மிகவும் சிறப்பாக நடைபெற்றது. மாநாட்டிற்குத் திருவாளர் சோதி இராமசாமி அவர்கள் தலைமை தாங்கினுர்கள். மாண்புமிகு அமைச்சர் ஆர். எம். வீரப்பன் அவர்கள் தொடக்கவுரையாற்றினுர். பண்டாரகர் சுப. அண்ணுமலை அவர்கள் திருப்பள்ளி எழுச்சி நூலை வெளியிட்டு உரையாற்றினுர்.

இசைவாணர் குடந்தை ப. சுந்தரேசனுர் அவர்கள் திருஅருட்பாவை இசைநயங்களுடன் பாடி விளக்கியது பாராட்டத்தக்கது.

## புதிய தமிழ்: தமிழக அரசு பயன்படுத்தும்

இப்போதைய தமிழ் மொழியிலிருந்து முற்றிலும் வேறுபட்ட புதிய தமிழை விரைவில் தமிழ்நாட்டரசு நடைமுறைப்படுத்தும் என்று கல்வியமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்துள்ளார். அரசு அலுவல்கள் உத்தரவுகள், சுற்றறிக்கைகள், பாடப்புத்தகங்கள் ஆகியவற்றில் இப் புதிய மொழி பயன்படுத்தப்படும் என்று தெரி

வித்ததுடன் இப் புதிய தமிழைப் பின்பற்றுமாறு செய்தித்தாள் களையும் கேட்டுக் கொண்டார்.

## மிகப்பெரிய வலம்புரிச் சங்கு

அரை மீட்டர் நீளம், ஒரு லிட்டர் கொள்ளளவு கொண்டதும், உலகின் மிகப்பெரிய வலம்புரிச் சங்குகளுள் ஒன்று எனக் கருதப் படுவதுமான வலம்புரிச் சங்கு ஒன்று, கேரள மாநிலத்திலுள்ள குருவாயூர் கிருட்டிணன் கோவிலில் வைக்கப்பட்டுள்ளது. இச் சங்கிற்குப் பொன்னால் செய்யப்பட்ட பூண் போடப்பட்டுள்ளது. இச் சங்கின் எடை 2 கிலோ கிராம் என்றும், இதன் மதிப்பு ரூ. 2 நூறாயிரத்திற்கு மேலிருக்கும் என்றும் கூறப்படுகிறது. இதனை இக் கோயிலுக்கு வழங்கியவர் பி. என். சாமி என்பவராவார்.

## தமிழ்நாடு ஓதுவார் மூர்த்திகள் சங்கம்

இச் சங்கத்தின் 33ஆவது திங்கள் வழிபாடும் நால்வர் படத் திறப்பும் இராசா சர். அண்ணாமலை செட்டியார் 98ஆவது பிறந்த நாள் விழாவாகவும் அமைந்து 8—10—78 இல் எம். ஜி. ஆர். நகர் அன்னை சத்யா வீதியிலுள்ள செல்வ விநாயகர் கோயில் செயற் குழுவினரால் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

## புதுவைக்கு அருகில் சோழர் கல்வெட்டுகள்

தென்னார்க்காடு மாவட்டம் விழுப்புரம் வட்டத்தில் உள்ள ஆழியூரில் சிறப்புவாய்ந்த சோழர் கல்வெட்டுக்கள் அங்குள்ள ஐயனார் கோவ்லில் கண்டுபிடிக்கப்பட்டன. முதல் இராசராச சோழனின் 22 ஆம் ஆட்சியாண்டும் (கி. பி 1007) முதல் இராசேந்திர சோழ னின் 8 ஆவது ஆட்சி யாண்டும் (கி. பி. 1020) 13 ஆவது ஆட்சி யாண்டும் கி. பி. 1025) இக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படு கின்றன. இக் கல்வெட்டுக்களால் புதுச்சேரியைச் சுற்றியுள்ள பகுதி களில் 11 ஆம் நூற்றாண்டின் அரசியல் பொருளாதாரம் மற்றும் மக்கள் வாழ்வியல் செய்திகளும் ஆழியூர் (அல்லது கோவிந்தச்சேரி) சோழர் காலத்தில் திரிபுவன மகாதேவி சதுர்வேதி மங்கலத்தின் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பதும் அறியக்கிடக்கின்றன.

## புதிய போப்பாண்டவர் மறைவு

உலகிலுள்ள 70 கோடி கத்தோலிக்க கிறித்தவர்களின் சமயத் தலைவரும் 3—9—78 இல் பதவி ஏற்றவருமான புதிய போப்பாண் டவர் ஜான்பால் அவர்கள் கடந்த 28—9—78 இல், தமது 65 ஆவது அகவையில் மாரடைப்பால் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். மறைந்த போப்பாண்டவரின் இன்னுயிர் இறை யடியில் இன்புறுவதாக.

## டாக்டர் வாசுகி அம்மையார் மறைவு

பேராசிரியர் மோசூர் கந்தசாமி முதலியார் அவர்களின் திருமக ளாரும், தில்லி பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வந்தவரும் "இன்பத் தமிழோசை" என்னும் கழக வெளியீட்டின் ஆசிரியருமான டாக்டர் வாசுகி அம்மையார் அவர்கள் கடந்த 23-9—78 இல் சென்னையில் காலமானார்கள் என்ற செய்தி யறிந்து வருந்துகிறோம். மறைந்த அம்மையார் அவர்களின் குடும் பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலை மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

### உள்ளாட்சித்துறை அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றம் வருகை.

'அடிகளார் வாழ்ந்த தமிழ் வளர்த்த இடத்தை இன்று காணும் நல்வாய்ப்பைத் தாமரைத்திரு. வ. சு. அவர்கள் வழங்கினுர்கள். மறைமலை அடிகளாரை உயிரோடு காண்பது போன்ற உவகையை நான் பெற்றேன். இந்தக் கலைமன்றம் இன்னும் சீரியதாகப் பேணிக் காக்கப்பெற்றுத் தமிழர்களின் புனிதப் பெருங்கோயிலாக விளங்க வேண்டுமென்பது என் அவா.'

11-10-1978 (ஒ-ம்.) கா. காளிமுத்து.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-கஉ, சஅஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக ஆட்சியாளர்—செப். 78) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்—செப். 78) | ரூ 5 00 |
| திரு. பி. துரைசாமி, I. O. B. கரிவலம் வந்த நல்லூர் (செல்வி. சீதாலெட்சுமி பிறந்தநாள் 7-9-78) | ரூ. 5 00 |
| திருமதி தாயம்மாள் அறவாணன் அவர்கள், (டாக்டர் பட்டம் பெற உதவியமைக்காக) | ரூ. 101 00 |

---

## மதிப்புரை

### தமிழ்க்கலை - திரு. வி. க.

[தொகுப்பு: திரு. அன்புப் பழம்நீ. பாரி நிலையம், சென்னை-1. விலை ரூ. 1-50]

திரு. வி. க. அவர்களுடைய இளமைக் காலச் சொற்பொழிவுகள், "தமிழ்த் தென்றல் (அ) தலைமைச் சொற்பொழிவுகள்" என்ற தலைப்பில் நூலாக வெளி வந்துள்ளன. அதுபோல் அவர்தம் முதுமைக் காலச் சொற்பொழிவுகள் ஆறினைத் திரு. அன்புப் பழம்நீ அவர்கள் செம்மையாகத் தொகுத்து வெளியிட்டுள்ளதே இந் நூல். கலை, சமயம், வாழ்க்கை நெறி, அரசியல் ஆகியன பற்றிய அவர்தம் முதுமைக் கால உணர்வுகள் இந்நூலில் பதிந்துள்ளன. தேசியத் தலைவராகத் திகழ்ந்த இவர்தம் முதுமைக் காலக் கருத்துக்கள் இளமைக் காலக் கருத்துக்களினின்று பெரிதும் மாறுபட்டிருப்பதை இந்நூலில் காணலாம். இந்நூலினைத் தொகுத்த ஆசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது.

### கிரேக்க நாடகத்தில் தமிழ் உரையாடல்

[இரா. மதிவாணன், தாய்நாடு பதிப்பகம், 31, புகைவண்டி நிலையப்பாதை, வில்லிவாக்கம், சென்னை-49. ரூ. 2-00.]

இக்காலத் தமிழ் எழுத்தாளர்கள் கதை, நாடகங்களில் அப்படியே ஆங்கில உரையாடல்களைத் தமிழில் எழுதுவது போல ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட கிரேக்க மொழி நாடகத்தில் தமிழ் உரையாடல்களை அப்படியே கையாண்டுள்ளதைக் கண்டறிந்து அதனை அறிமுகப்

படுத்துவதே இந் நூல். கிரேக்கர்களிடையே தமிழ்மொழி பெற்றிருந்த செல்வாக்கை வெளிப்படுத்தித் தமிழ் மொழி கடல் கடந்து பெற்றிருந்த ஏற்றத்தை எடுத்துக்காட்டும் இந்நூலை இயற்றிய ஆசிரியரின் பணி பாராட்டுதற்குரியதாகும். தமிழர்கள் சங்ககாலத்தில் பெற்றிருந்த வெளிநாட்டுத் தொடர்பை இது நன்கு வலியுறுத்துகின்றது. ஆசிரியர் அரும்பாடுபட்டு நாடகத்தில் பயின்று வந்துள்ள தமிழ்மொழியின் பழைய வடிவங்களுக்குப் பொருள் விளக்கம் தந்துள்ளமை அவர்தம் மொழிப் புலமையை நன்கு காட்டுகின்றது. சிறிய நூலாயினும் மிக அரியது; பெரியது; எல்லையில் பயன் உடையது.

## ECONOMICS IS NOT ALL

[Thought and Tributes - Dr. B. Natarajan, E.T.E.S. 42-A/1, Harringtion Road, Madras-31. Rs. 25-00.]

தமிழ்நாட்டுப் பொருளியல் அறிஞர்களுள் தலைசிறந்தவராகிய டாக்டர் பா. நடராசன் அவர்கள் 67வது பிறந்தநாள் விழா மலராக மலர்ந்துள்ள இம் மலர் பொன் மலராகத் திகழ்கிறது. பெருந்தலைவர்கள், பேரறிஞர்கள் வாழ்த்துரைகளுடன் விழாத் தலைவரின் பொருளியல் துறைப் பணியைப் பாராட்டி அறிஞர்களின் கட்டுரைகளும் இம் மலரில் இடம் பெற்றுள்ளன. மலரின் சிறப்புப் பகுதியாக அமைந்திருப்பது டாக்டர் பா. நடராசன் அவர்கள் எழுதிய அரிய கட்டுரைகளாகும். 'வள்ளுவரின் பொருளியல் கருத்துக்கள்' 'திருவுந்தியார் ஆங்கில மொழி பெயர்ப்பு' போன்ற கட்டுரைகள் மிகவும் பயனுடையவை. மலரின் தொடக்கத்தில் அரசியல் பேரறிஞர் பேராசிரியர் ஜமீல் அவர்கள் டாக்டர் பா. நடராசன் அவர்களைப் பேட்டி காணும் வகையில் அவர்தம் அரிய ஆற்றல்களையும் அவர் செய்த அரும்பணிகளையும் அழகுபட எடுத்துக்காட்டியுள்ளார். கண்ணைக் கவரும் வகையில் அழகான அச்சுடன் மலரை வெளியிட்ட பேராசிரியர் ஜமீல் பாராட்டுதலுக்குரியவர்.

## சௌந்தரநாயகி அந்தாதி நடனபுரீசர் பதிகம்

[ஆசிரியர் : செஞ்சொற்கொண்டல், டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச். டி., திருச்சிற்றம்பலம் கோயில் குடமுழுக்கு வெளியீடு.]

ஐம்பது எழுசீர்க் கழி நெடில் ஆசிரிய மண்டில விருத்தப் பாக்களான் அமைந்துள்ளது இந்நூல். நூலின் பாயிரப்பகுதி எட்டுக் கலிமண்டிலப் பாக்களால் அமைந்துள்ளது. நூலின் இறுதியில் நடனபுரீசர் பதிகம் இடம் பெற்றுள்ளது.

பாக்கள் அனைத்தும் எளிய இனிய ஆற்றொழுக்கான நடையில் உள்ளத்தை உருக்கும் பான்மையனவாய் அமைந்து விளங்குகின்றன. செஞ்சொற் கொண்டலின் கருத்து வண்ணமும் கற்பனைத் திறனும் இறைப்பற்றும், இயற்கை ஈடுபாடும், அருள்தோய்வும் இந் நூலால் புலப்படுகின்றன.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.